அங்கில நாடகக் கதைக்கோத்து கதை — 7

# வேனீசு நகரத்து வர்த்தகன்






சென்னை :

வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

ரெஜிஸ்தர் செய்தது] 1914 [விலை 2 அணா



# வேனீசு நகரத்து வர்த்தகன்



வேனீசு என்பது இற்றலி தேசத்திலுள்ள தொரு பட்டணம். இற்றலி தேசம் முழுவதிலும் ரோமன் கதோலிக்குக் கிறிஸ்தவர்களே பிரபலமா யிருந்தார்கள். யூதமதஸ்தர்களும் சிற்சிலர் அங்கங்கே இருந்தார்கள். ஆதி காலத்தில் கிறிஸ்து பிறப்பதற்கு முன்னால், யூதர்கள் மிகவும் பிரபலமான ஜாதியார்களாய் இருந்தார்கள். கி பி. 70-ம் வருஷத்தில் ஜெருசலேம் பட்டணத்தை டைட்டஸ் (Titus) என்னும் ரோமச்சக்கரவர்த்தி அழித்துப் பாழாக்கியதுமுதல், யூதர்கள் நிற்க நிலையின்றிச் சிதறி வேறு வேறு நாடுகளிற்போய்ச் சேர்ந்தார்கள்.

யூதர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் பரஸ்பரமாக ஜன்மப்பகையுண்டு. யூதர்களில் அநேகர் சிறந்த தனவான்

கள். அவர்களுடைய தானதர்மக் கொள்கைகளுக்கும் கிறிஸ்தவர்களுடைய தானதருமக் கொள்கைகளுக்கும் நிரம்ப விரோதம் உண்டு. தங்களுடைய பகையாளிகளான கிறிஸ்தவர்களை வெல்வதற்கும் இம்சிப்பதற்கும் எப்பொழுது சமயம் வாய்க்குமோ வென்று யூதர்கள் எதிர்பார்த்துக்கொண்டே இருந்தார்கள். யூதர்கள் அதர்மசீலர்கள் என்றும், அநியாயக்காரர்கள் என்றும், கொடியர்கள் என்றும், இணக்கத்திற் கேற்றவர்களல்லர் என்றும் கிறிஸ்தவர்கள் அவர்களை எப்பொழுதும் இகழ்ந்து கண்ட இடத்தில் திட்டுவார்கள்.

ஐரோப்பா கண்டத்தவர்கள் எல்லாரும் யூதர்களையும் அவர்களுடைய மதத்தையும் நிந்தித்து வந்தார்கள்; அவர்களுடன் சகவாசஞ் செய்யாமல் வெறுத்து வந்தார்கள்.

பிரான்சுதேசத்தில் 'ரெவோலூஷன்' என்னும் மகா கலகம் நடந்து அடங்கியபிறகு, யூதர்களுக்குப் பிரஞ்சுக்காரர்கள் சமானத்துவம் அளித்து, அவர்களோடு இணங்கி வாழத் தலைப்பட்டார்கள். யூதர்களின் விஷயத்தில் முதன் முதலில் நட்புப் பாராட்டியவர்கள் பிரஞ்சுக்காரர்களே. அதற்கு முன்னால், எந்தத் தேசத்திலும் மற்றக் குடிகளுக்குள்ள உரிமைகள் எவையும் யூதர்களுக்கு இல்லாதிருந்தன. 1858 - ஆம் வருஷத்தில் அவர்களுக்கு அங்கிலப் பார்லிமென்டு சபையில் மெம்பராகும் உரிமை கிடைத்தது. இக் காலத்தில் யூதர்களில் அநேகர் கல்வித்துறையிலும், சாஸ்திர ஆராய்ச்சியிலும், கைத்தொழில்களிலும், சிறந்தவர்களாக விளங்குகின்றார்கள்.

இப்பொழுது விவரிக்கப் புகும் சங்கதி பூர்வத்தில் யூதர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் வன்பகை மிகுந்திருந்த காலத்தில் நிகழ்ந்ததாகும். வேனீசு நகரத்தில்

ஷைலாக் என்னும் ஒரு யூதன் இருந்தான். அவன் வட்டி வியாபாரம் செய்து வந்தான்; கிறிஸ்தவ வர்த்தகர்களுக்குப் பணம் கடன் கொடுத்துக் கடும் வட்டி வாங்கி, மிகுந்த திரவியம் சேர்த்துச் செல்வவானாக இருந்தான்.

அவன் வன்மன முடையவனாதலின், மிகவும் கண்டிப்பாகக் கடனை வசூல் செய்வான்; கடன் வாங்குகிறவர்களைப் பல வகையிலும் நிர்ப்பந்தப் படுத்துவான். ஆகையால், ஜனங்களெல்லாரும் அவனை வெறுத்து வந்தார்கள். நல்ல மனிதர்களா யிருப்பவர்களுக்கு அவனிடத்திற் பிரிய முண்டாகுமோ? அப்படி அவனை வெறுத்துக்கொண்டிருந்தவர்களுள் அந்தோனியோ என்னும் நல்லான் ஒருவனுவான்; இவன் வாலிபப் பிராயமுடையவன்; வேனீசு நகரத்திலேயே வர்த்தகஞ் செய்துகொண் டிருந்தான்.

எவரேனும் சங்கடத்தில் அகப்பட்டுத் தத்தளித்தால், அந்தச் சமயத்தில் அவர்களுக்கு அந்தோனியோ வட்டியில்லாமற் கடன் கொடுத்துச் சகாயஞ் செய்வது வழக்கம். அந்தோனியோவுக்கு ஐசுவரியமும் தயாளமும் அதிகமாக இருந்தன. ஆதலால், அவனிடத்தில் ஷைலாக்கு கொடும் பகை கொண்டிருந்தான். அவ் விருவர்களுடைய நடவடிக்கைகளுங் கொள்கைகளுஞ் செய்கைகளும் மிகவும் வேறுபட்டிருந்தன. பேராசை கொண்ட யூதனுக்கும், தயாள மிகுந்த அந்தோனியோவுக்கும் இயற்கைக் குண வித்தியாசத்தினுல் பெரும்பகை உண்டா யிருந்தது.

ஊரிலுள்ள வியாபார விவகாரஸ்தலங்களில் ஷைலாக்கைப் பார்க்கும்பொழுதெல்லாம், அவனைக் கடும் வட்டிக்காரனென்றும், நீச விருத்திக்காரனென்றும், வன்மன முடைய வஞ்சகனென்றும், லோபி என்றும், பாவி என்

றும் அந்தோனியோ சிந்திப்பான். அத்தனை வசைகளை யும், பதில் பேசாமல், அந்த யூதன் வாங்கிக் கொள்ளு வான். அதனால் அவன் பொறுமை மிகுந்தவனாகத் தோற்றினும், உள்ளத்தில் அந்தோனியோவை எந்த வகை யிற் பழி வாங்கலாமென்று இரகசியமாக அவன் ஆலோ சித்துக்கொண் டிருந்தான்.

அந்தோனியோ என்பவன் மற்றவர்களை விட இரங் கிய மனமுடையவன், உத்தமமான நிலைமையில் இருப்ப வன். பிறருக்கு உபகாரஞ் செய்வதிற் சலியாதவன். உள் ளபடி உரைக்குமிடத்து, இற்றலி தேசத்திற்குள் ரோமா புரிக்குரிய சீருஞ் சிறப்புஞ் சீலமுங் கௌரவமும் அவன் ஒருவனிடத்திலேயே விளங்கினவல்லாமல், வேறெவரிடத் தும் அகப்படவில்லை.

வேனீசு நகரவாசிகளெல்லாரும் அவனிடத்து மிகுந்த அன்புகொண் டிருந்தார்கள். ஆனால், அவனிடத்தில் நெருங்கிப் பழகி அந்தரங்கம் மிகுந்து வர்த்தித்தவன் பாசானியோ என்பவனாவான். அவன் வேனீசு நகரத்துப் பிரபு குமாரர்களுள் ஒருவன். அவனுக்குப் பிதுராஜித சொத்து கொஞ்சமே கிடைத்தது. அந்தஸ்தில் உயர்ந்த வர்களாகவும் ஐசுவரியத்திற் குறைந்தவர்களாகவும் இருப் பவர்களுடைய நிலைமை கஷ்டமானது. அப்படிப்பட்ட குடும்பங்களிலுள்ள இளைஞர்கள் தம்முடைய ஆஸ்தியையும் வரும்படியையும் எண்ணாமல், தங்களுடைய அந்தஸ்து உயர்வானதென்று மாத்திரம் எண்ணித் தமது சக்திக்கு மிஞ்சின செலவுகள் செய்து சொத்துக்களை இழந்து, சுக மற்றுச் சோர்வுற்றுச் சங்கடப்படுவது வழக்கமன்றோ? அந்த வழக்கத்தின்படி, பாசானியோ தனக்குள்ள அற்ப மான ஆதாரத்தை எண்ணாமற் பெருஞ் செலவுகள் செய்து

திக்கத்திற்கு ஆளானன். அவனுக்குப் பணம் வேண்டிய பொழுதெல்லாம் அந்தோனியோ அவனுக்குப் பணங் கொடுத்து உதவி வந்தான். அந்தோனியோவும் பாசானியோவும், உடல் வேருயினும், உயிர் ஒன்ருக நேசத்துடன் விவகரித்துக்கொண் டிருந்தார்கள்; பணத்தின் விஷயத்திலும் அவர்கள் வித்தியாசம் பாராட்டாமல், ஒரே பெட்டியினின்று இருவரும் பணம் எடுத்துச் செலவழித்து வருவதாகத் தோற்றிற்று.

ஒருநாள் அந்தோனியோவி னிடத்திற்குப் பாசானியோ வந்து, "எனது ஆருயிர் நண்ப! என்னுடைய செல்வமெல்லாம் சிதறிப்போயிற்று. அதனை மீட்டுச் செவ்வைப் படுத்துவதற்கு வகை ஒன்றையுங் காணேம். ஓரிடத்திற் செல்வ மிகுந்த ஸ்திரீயொருத்தி இருக்கின்ருள். அவள்மீது நான் காதல்கொண் டிருக்கின்றேன். அவளுடைய தகப்பனர் சின்னுளைக்குமுன் இறந்துபோனர்; அவர் உயிர்த்திருந்த பொழுது நான் அவருடைய வீட்டிற்கு அடிக்கடி போவதுண்டு. அவளைப் பார்க்கும் பொழுது சிலவேளைகளில் அவள் தன்னுடைய கமல நயனங்களினின்றும் மௌன வார்த்தைகள் என்னுடன் பேசுவதுபோல எனக்கு அடிக்கடி தோன்றுவ துண்டு. அந்த மௌன மொழிகள், 'இங்கே உனது வருகை உவந்த காரியமே' என்று கூறுவதுபோல எனக்குத் தோன்றும்.

"அவளோ செல்வத்திற் சிறந்தவள். அவளை மணக்க விரும்புவோன் அவளுடைய அந்தஸ்துக்குத் தக்கபடியன்றே இருத்தல் வேண்டும்? அவளைக் காதலிப்பதற்கேற்ற ஆடையாபரணங்கள் முதலிய அலங்கார விசேஷங்களும், மற்றுமுள்ள பரிவராங்களாகிய உபகரணங்களும் தேவையா யிருக்கின்றமையின், அந்தோனியோ! நீ எனக்

கோர் உபகாரஞ் செய்தல்வேண்டும். இதுகாறும் நீ செய்து வந்த உபகாரங்கள் எல்லாவற்றினும் இதுவே உயர்ந்த தாகும். எனக்கு நீ இப்பொழுது மூவாயிரம் தூக்கட்டு கள் கடனாகக் கொடுத்து உதவினால், அதைக்கொண்டு நான் அந்தச் செல்வ மாதை மணப்பதற் கேற்ற சிறப்புடையோ னாக விளங்குவேன்'' என்று கேட்டான். தூக்கட்டு (Ducat) என்பது ஐரோப்பா கண்டத்தில் தென்கீழ்த் திசையிலுள்ள நாடுகளில் முன்னர் வழங்கிவந்த தொரு நாணயம். வெள்ளித் தூக்கட்டு ஒன்றேமுக்கால் ரூபாய் பெறும்; தங்கத் தூக்கட்டு நாலேமுக்கால் ரூபாய் பெறும்.

அந்தச் சமயத்தில் பாசானியோவுக்குக் கொடுத்து உதவுவதற்கு அந்தோனியோவினிடத்திற் பணமில்லை. ஆனால், வியாபாரத்திற்காகப் பிறதேசங்களுக்கு அவனு டைய கப்பல்கள் போயிருந்தன. சரக்குகள் ஏற்றிக் கொண்டு அவைகள் சீக்கிரத்திலேயே திரும்பி வருமென்று அவன் எதிர்பார்த்துக்கொண் டிருந்தான். கப்பல்கள் சீக்கிரத்தில் திரும்பிவந்துவிடு மென்னுந் தைரியங்கொண்டு, அவன் கடன் வாங்கியாவது தன் நண்பனுக்குப் பணம் கொடுக்கத் தீர்மானித்தான். வட்டி வியாபாரிகளுட் செல்வனாகிய ஷைலாக்கினிடத்தில் தன்னுடையக் கப் பல்களைப் பொறுப்புக் கட்டிக் கடன் வாங்குவதாக அந் தோனியோ சொன்னான்.

அந்தோனியோவும் பாசானியோவுஞ் சேர்ந்து ஷை லாக்கினிடம் போனார்கள். அவனைப் பார்த்து அந்தோனி யோ, "எனக்கு 3000 தூக்கட்டுகள் கடன் கொடு. உனக்கு என்ன வட்டி வேண்டுமானாலும் கொடுக்கிறேன். என் னுடைய கப்பல்கள் கடலில் வந்துகொண் டிருக்கின்றன.

அவைகளிலுள்ள சரக்குகளைக் கொண்டு உன்னுடைய பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடுகிறேன்" என்றான்.

அந்த வார்த்தையைக் கேட்டு ஷைலாக்கு தனக்குள்ளே, "இவன் என் கையில் ஒரு தடவை அகப்படுவானானால், பண்டைக் காலத்திலிருந்து அவன்மீது எனக்குள்ள மாச்சரியத்தைப் பூர்த்தியாகத் தீர்த்துக் கொள்ளுவேன்; பகையை நன்றாகச் சாதிப்பேன். அவன் நம்முடைய யூதஜாதியை வெறுக்கிறான்; வட்டி வாங்காமல் பணம் கடன் கொடுக்கிறான்; அநேக வர்த்தகர்களோடு இருக்கையில் என்னைத் திட்டுகிறான்; நியாயமான மார்க்கத்தில் நான் சம்பாதிக்கும் திரவியத்தை வட்டிப் பணம் என்று ஏசுகிறான். நமது ஜாதியின்மீது இவ்வளவு பகைகொண்டு தீமை செய்கிற சண்டாளனை மன்னித்து விடுவேனாயின், எனது குலமே நாசமாகும். குலப்பெருமையைச் சாதிக்கா விட்டால் நானும் ஒரு மனிதனா? யூதகுலத்திற் பிறந்து, அந்தக் குலத்தைத் தூஷிக்கிற பாவியை வாளா விடுவது எனக்குத் தருமமா? எனது குலமே சாக்ஷியாக, அவனை நான் விடப்போகிறதில்லை" என்று ஆலோசித்துக்கொண் டிருந்தான்.

ஷைலாக்கு யோசனையில் ஆழ்ந்திருப்பதையும், தனக்குப் பதில் சொல்லாதிருப்பதையுங் கண்டு அந்தோனியோ சீக்கிரத்திற் பணம் வாங்கிக்கொண்டு போகவேண்டுமென்னும் ஆத்திரத்துடன், "ஷைலாக்! நான் சொல்லுகிறது உன் காதிற் படுகின்றதா? பணம் கொடுக்கப் போகின்றாயா?" என்று வினவியதற்கு ஷைலாக்கு,

"அந்தோனியோ துரையே! கடைத் தெருவில் எத்தனையோ தடவை அடிக்கடி என்னுடைய திரவியப் பெருக்கத்தையும் வட்டி வரும்படியையுந் திட்டிப் பேசி இருக்

கின்றாயே. அந்த வசைகளை யெல்லாம் நான் பொறுத்துக்கொண் டிருக்கவில்லையா? பொறுமையே எங்கள் குலத்திற்குப் பூஷணம். ஆனதனாலே, உன்னுடைய வசை வார்த்தைகளையெல்லாம் பொறுமையுடன் வாங்கிக்கொண்டேன்.

“அதைத் தவிர என்னை நாஸ்திகசிகாமணி யென்றும், கழுத்தறுக்குங் கொலை பாதகனென்றுங் கூறினாய்; நான் தரித்துள்ள யூத சம்பிரதாயமான ஆடைகளின்மீது காறித் துப்பினாய்; நாயை உதைத்துத் தள்ளுவதுபோல, என்னைக் காலால் தள்ளி இகழ்ந்தாய்.

“நல்லது, இப்போது உனக்கு என்னுடைய உதவி வேண்டி யிருக்கின்றதுபோலத் தோற்றுகின்றது. என்னிடத்தில் வந்து, ‘ஷைலாக்! எனக்குப் பணம் கடன் கொடு’ என்று கேட்கின்றாய். நாயினிடத்திற் பணம் இருக்குமோ? இழிவான நாயென வெறுத்து நீக்கப்படும் பிராணி 3000 தூக்கட்டுகள் கடன் கொடுக்கத் திராணி வாய்ந்திருக்குமோ? இப்பொழுது நான் மரியாதையாகத் தலை வணங்கி, அழகிய துரையே! சென்ற புதன்கிழமை என்மீது காறித் துப்பினாய்; மற்றொரு சமயத்தில் நாயென்று என்னை நிந்தித்தாய். நீ செய்த இந்த மரியாதைகளுக்காக நான் உனக்குப் பணம் கடன் கொடுக்கவேண்டுமோ என்னட்டுமோ?” என்று மறுமொழி கூறினான்.

“மறுபடி உன்னை நான் அப்படித் திட்டினாலுந் திட்டுவேன், மறுபடி காறி உமிழ்வேன், உதைத்துந் தள்ளுவேன். நீ எனக்கு இந்தத் தொகையைக் கடனாகக் கொடுப்பதானால், நண்பனுக்குக் கொடுப்பதுபோலக் கொடாதே; சத்துருவுக்குக் கொடுப்பதுபோலக் கொடு. ஒருவேளை நான் இதைத் திருப்பிக்கொடுக்கத் தவறினால்,

அப்பொழுது நீ தாராளமாக முறைப்படி, சங்கோசமில்லாமல், அதற்குள்ள அபராதத்தை வசூல் செய்யலாம்'' என்று அந்தோனியோ மறுமொழி பகர்ந்தான்.

“ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? இதோ பார். ஈதென்ன! இவ்வளவு கோபமுந் தாபமும் ஏன்? அப்படிக் கோபிக்காதே, நான் உனக்கு நண்பனாகவே இருந்து உன்னுடைய அன்புக் குரியவனாவேன். நீ என்னை அவமானப் படுத்தியதெல்லாம் மறந்து விடுவேன். உன்னுடைய அக்கரைக்கு உதவுகிறேன். ஆனால், என்னுடைய பணத்திற்கு வட்டி வேண்டாம். உன்னுடைய அன்பு எனக்கு இருந்தாற் போதும். வட்டி வேண்டாம்'' என்று ஷைலாக்கு வஞ்சகமாகச் சொன்னான்.

ஷைலாக்கு இவ்வளவு அன்புகாட்டித் தயாளமாகப் பேசியது அந்தோனியோவுக்கு ஆச்சரியமாக இருந்தது. பின்னும், ஷைலாக்கு அன்புடையவனைப்போலவே நடித்துக்கொண்டு, தன்னுடைய உத்தேசமெல்லாம் அந்தோனியோவின் நட்பையும் அன்பையும் பெறுவதே யொழிய வேறன்றாதலின், பணத்திற்கு வட்டி வேண்டாம் என்று உறுதியாகக் கூறினான். ஆனால், தன்னுடைய வக்கீலினிடம் அந்தோனியோ வந்து, அங்கே விளையாட்டுப்போல ஒரு பத்திரத்திற் கையெழுத்துப் போட்டாற் போதும்; அந்தப் பத்திரத்தில் வேறே விசேஷமாக ஒன்றும் எழுத வேண்டாம்; குறிப்பிட்ட கெடுவிற் பணத்தைத் திருப்பித் தராவிட்டால், அதற்குப் பதிலாகத் தன்னுடைய தேகத்தில் அவன் குறிப்பிடுகிற பாகத்தினின்று ஓர் இராத்தல் தசையை வெட்டி யெடுத்துக் கொடுப்பதாக எழுதினாற் போதும் என்று ஷைலாக்கு சொன்னான்.

அவனுடைய நய வஞ்சகமான வார்த்தைகளைக் கேட்டு அந்தோனியோ, “அஃது எனக்குச் சம்மதமே. நீ சொல்

னும் நிபந்தனைக்கு நான் உடன்படுகிறேன். இந்தப் பத்திரத்திற்குக் கைச்சாத்து இடுகிறேன். இப்படிச் சமயத்திற்கு உதவிய யூதன் அன்புள்ளவனே யென்று சாற்றுவேன்" என்று சொன்னான்.

அந்தோனியோ அவசரப்பட்டு அவ்வாறு உரைக்கக் கேட்டுப் பாசானியோ, "எனக்காக நீ அப்படிப்பட்ட பத்திரத்திற்குக் கையெழுத்துப் போடாதே" என்று தடுத்துச் சொல்லியும், அந்தோனியோ அவனுடைய தடை வார்த்தையை மேற்கொள்ளாமல், "நான் அதற்குக் கையெழுத்துப் போடுவது திண்ணம்; அதனாற் பயமில்லை. ஏனெனில், குறித்திருக்கப்பட்ட கெடுவுக்கு முந்தியே என்னுடைய கப்பல்கள் திரும்பி வந்துவிடும். அவைகளில் இவனுக்குக் கொடுக்கவேண்டிய பணத்தைவிட எத்தனையோ மடங்கு அதிகமான விலையுள்ள சரக்குகள் நிறைந்திருக்கும்" என்று மொழிந்தான்.

பாசானியோவுக்கும் அந்தோனியோவுக்கும் நடந்துகொண்டிருக்கும் விவாதத்தைக் கேட்டு ஷைலாக்கு, "ஓ ஏப்ராஹாம் தந்தையே! இந்தக் கிறிஸ்தவப் பையல்கள் எவ்வளவு சந்தேகப் பிராணிகளாக இருக்கிறார்கள்! இவர்களுடைய சொந்த விவகாரங்களில் இவர்கள் கன் மனங்கொண்டு நடப்பதனால், மற்றவர்களுடைய எண்ணங்களையும் சந்தேகிக்கிறார்கள். திருடனாக இருப்பவன் பிறரை நம்புவானோ? விவகாரங்களில் கிறிஸ்தவர்கள் இரக்கமில்லா தொழுகுவது வழக்கமாகையால், இவர்களுக்கு இந்தச் சந்தேகபுத்தி உண்டாகின்றது" என்று கூவி விட்டுப் பாசானியோவை நோக்கி,

"இதோ, பாசானியோ! குறித்த நாளில் அவன் பணத்தைத் திருப்பிக் கொடுக்காவிட்டால், பத்திரத்திற்

கண்ட நிபந்தனையை நிறைவேற்றுவதனுல் எனக்கு வரும் லாபம் என்ன? நீயே யோசித்துச் சொல்லு. உனக்குத் தெரியாத காரியமா? ஒரு மனிதனுடைய உடம்பினின்று வெட்டி யெடுக்கும் ஓர் இராத்தல் தசையானது, ஆட்டிறைச்சி மாட்டிறைச்சி முதலியவைகளைப்போல, அவ்வளவு மதிக்கத்தக்கதன்று. மானிட யிறைச்சியினுல் எவருக்கு என்ன பிரயோஜனம்? அவனுடைய தயவுக்குப் பாத்திரனுகும் பொருட்டு நான் இப்படி நட்புக் காட்டுகின்றேன். அவன் இதை நட்புக் காரியமாகக் கொண்டு இந்தப் பத்திரத்திற்குக் கையெழுத்துப்போட ஒப்புக் கொண்டால், ஒப்புக்கொள்ளட்டும்; இல்லாவிட்டாற் போகட்டும்'' என்று சொன்னுன்.

தன்னுடைய எண்ணங்கள் அன்புமிகுந்தவை யென்று யூதன் எவ்வளவு சொல்லியும், பாசானியோ அவனை நம்ப வில்லை. தனக்காகத் தன்னுடைய நண்பன் அவ்வளவு பயங்கரமான அபராதங் கொடுக்க ஒப்புக்கொள்வதில் அவனுக்குச் சம்மதமில்லை. பாசானியோ பலமுறை தடுத்துக் கூறியுங் கேளாமல் அந்தோனியோ, யூதன் சொல்லியதுபோல, அது விளையாட்டுக் காரியமே யென்றெண்ணி, அந்தப் பத்திரத்திற்குக் கையெழுத்துப் போட்டான்.

பாசானியோ விவாகஞ் செய்துகொள்ள விரும்பிய சீமாட்டி வேனீசு நகரத்திற்குச் சமீபத்திலுள்ள பெல்மான்ட் என்னும் ஊரில் இருந்தாள். அவளுக்குப் போர்ஷியா என்று பெயர். அவள் அதிசயமான ரூபலாவணியங்களும், புத்திக்கூர்மையும், பெருமனமும் பொருந்தியவள்.

அந்தோனியோ தன்னுடைய உயிரைக் குதுவை வைத்துக் கடன் வாங்கிக்கொடுத்த பணத்தை எடுத்துக்

கொண்டு, பாசானியோ நல்ல பரிவாரங்களுடன் சிறப்பாகப் பெல்மான்டுக்குப் புறப்பட்டான்; தனக்கு உற்ற துணையாக கிரேஷியானோ என்னும் குலமகனை அழைத்துக்கொண்டு போனான். பாசானியோ விரும்பியபடி, போர்ஷியா அவனைக் கணவனாகக் கொள்ள இசைந்தாள்.

தனக்கு ஆஸ்தி ஒன்றுமில்லை யென்றும், தான் பெருமை பாராட்டத்தக்கவை உயர் குலப்பிறப்பும் கௌரவமான பரம்பரையுமே யென்றும் போர்ஷியாவுக்குப் பாசானியோ தன்னுடைய உண்மையான நிலைமையை ஒளியாமல் தெரிவித்தான். போர்ஷியாவுக்கு ஏராளமான சொத்துக்கள் இருந்தன. ஆதலால், செல்வவானாகிய கணவன் வேண்டுமென்று அவள் விரும்பவில்லை. பாசானியோவின்மீது பிரேமைப்பட்ட விஷயத்தில் அவள் ஐசுவரியத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல், அவனுடைய மேன்மையான குணங்களை எண்ணி, அவைகளுக்காகவே அவன்மீது ஆசைகொண்டாள்.

"நான் உனக்கு மனைவியாக இருக்கத்தக்கவளென்று நீ நினைப்பாயாயின், நான் இப்பொழுது இருப்பதைவிட எத்தனையோ மடங்கு அழகு வாய்ந்தவள் என்றும், எத்தனையோ மடங்கு ஐசுவரியம் படைத்தவளென்றும் நினைத்துக் கொள்வேன். எனக்கு ஒரு யோக்கியதையுமில்லை, படிப்புமில்லை, பாட்டுமில்லை, பள்ளிக்கூடம் கண்டறியேன், நற்பழக்கங்கள் எவையும் வாய்ந்திலேன். ஆனால், இனிக் கற்றுக் கொள்ளக்கூடிய பிராயத்திலிருக்கிறேன். படிப்பும் பழக்கமும் ஏற்காவென்னத் தக்கவாறு வயது முதிர்ந்து போகவில்லை. எல்லா விஷயத்திலும் நீயே எனக்கு வழிகாட்டி, என்னை ஆண்டு நல்வழிப் படுத்த வேண்டும்.

"நானும், என்னுடையவை யெனத் தக்க சொத்துக்களும், மற்றெல்லாமும் இப்பொழுது உன்னுடையவைகளாயின. பாசானியோ! நேற்றுவரையில் இந்த அழகிய மாளிகைக்குத் தலைவியாக இருந்தேன்; நானே சர்வாதிகாரியாக இருந்தேன்; இந்த வேலைக்காரர்களுக் கெல்லாம் யசமாட்டியாக இருந்தேன். இப்பொழுதோ வெனின், நாதா! இந்த வீடும், இந்த வேலைக்காரர்களும், இந்த நானும் உனக்கு உரிமைகளாயினோம். இவைகளையெல்லாம் இந்த மோதிரத்தோடு உன்றனக்கு அளிக்கின்றேன்" என்று மிகுந்த அடக்கத்துடன் மொழிந்து பாசானியோவுக்குப் போர்ஷியா ஒரு மோதிரங் கொடுத்தாள்.

தன்னைப்போன்ற எளிய நிலைமையி லிருப்பவனொருவனை அவ்வளவு ஐசுவரியமும் பெருந் தன்மையும்படைத்த போர்ஷியா கணவனாக ஏற்றுக்கொண்ட காருணிய விசேஷத்தை நினைத்துப் பாசானியோ மிகவும் ஆச்சரியப்பட்டு அவளிடத்து நன்றி மிகப் பாராட்டினான். அவளைக் கண்டால் அவனுக்குப் பெருஞ் சந்தோஷமும் மரியாதையான மதிப்பும் உண்டாயின. அவன் அவளுடன் பேசும்பொழுதெல்லாம் தனக்கு அவள்மீதுள்ள ஆசையையும், நன்றியறிவையும் இரண்டொரு வார்த்தைகளில் அப்போதைக்கப்போது, தொடர்ச்சியாக இல்லாமல், வெளியிடுவான். அவள் கொடுத்த மோதிரத்தை வாங்கிக்கொண்டு, அதனை ஒருபொழுதும் ஒருவருக்குங் கொடுப்பதில்லையென அவன் பிரமாணஞ் செய்தான்.

பாசானியோவுக்குப் பணிவான மனைவியாவேனென்று போர்ஷியா தயாளமாக வாக்களித்தபோது, போர்ஷியாவின் சேடியாகிய நேரிசாவும், கிரேஷியானோவும் தங்களுடைய யஜமானர்களுக்குக் குற்றேவல் செய்து

கொண்டு, அவ்விடத்தில் இருந்தார்கள். பாசானியோவுக்கும் அவனுடைய காதலிக்கும் சோபசாரங்கள் சொல்லிவிட்டுக் கிரேஷியானோ தானும் அதே சமயத்திற் கலியாணஞ் செய்துகொள்வதற்கு உத்தரவளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டான். அவனைப் பார்த்துப் பாசானியோ, "எனக்குச் சர்வ சம்மதம். நீயும் ஒரு மனைவியைச் சம்பாதித்துக் கொள்வாயானால், மகாராஜனாகக் கலியாணஞ் செய்துகொள்" என்று சொன்னான்.

"போர்ஷியா சீமாட்டியின் சேடியாகிய நேரிசாவின் மீது காதல்கொண்டிருக்கின்றேன். அவளுடைய யசமாட்டி உங்களை மணப்பது உண்மையானால், அவள் என்னை மணப்பதும் உண்மை யென்று அவள் எனக்கு வாக்களித்திருக்கின்றாள்" என்று கிரேஷியானோ தன்னுடைய விவாகத்தைப் பற்றிச் சொன்னான்.

அஃது உண்மையாவென்று போர்ஷியாவினவியதற்கு நேரிசா, "அம்ம! உம்முடைய சம்மதத்தை முன்னிட்டு, அப்படி நான் ஒப்புக்கொண்டிருக்கிறேன்" என்று பதில் கூறினாள். கிரேஷியானோவுக்கும் நேரிசாவுக்கும் விவாகம் நடப்பது தனக்குச் சம்மதமே யென்று போர்ஷியா தன்னுடைய சேடிக்கு உத்தரவு கொடுத்தாள். அப்போது, "கிரேஷியானோ! எங்களுடைய மண விருந்து உன்னுடைய விவாகத்தினால் மிகச் சிறப்பிக்கப் பெறும்" என்று பாசானியோ வேடிக்கையாகச் சொன்னான்.

இந்தக் காதலர்கள் இவ்வாறு சந்தோஷங் கொண்டாடிக்கொண்டிருக்கையில், அந்தோனியோவினிடத்திலிருந்து மிகுந்த கவலைக்கிடமான சங்கதி யடங்கிய கடிதமொன்றை எடுத்துக்கொண்டு தூதன் வந்து சேர்ந்தான். பாசானியோ அந்தக் கடிதத்தைப் படித்தவுடனே, அவனு

டைய முகம் ஒரே வெளுப்பாக வெளுத்துப் போயிற்று. அவனுடைய அருமையான நண்பனெவனோ இறந்துபோன சமாசாரம் அந்தக் கடிதத்தில் அடங்கியிருக்கிற தென்று, பாசானியோவின் முகக்குறியினல், போர்ஷியா நினைத்துக் கலங்கி நின்றாள்.

அவ்வளவு வருத்தமுண்டாக்கிய விஷயம் என்ன வென்று போர்ஷியாவினவ, "இனிமை மிகுந்தபோர்ஷியா! இதனி லடங்கிய வார்த்தைகளைப் போல வேறு எவையும் வெள்ளைக் காகிதத்தை இவ்வளவு பாழாக்குவனவல்ல. இந்த வார்த்தைகள் கர்னகடோமாய் இருக்கின்றன; இவை என் மனத்தைத் துளைக்கின்றன. மின் கொடியே! உன் மீது எனக்குள்ள காதலை உனக்கு நான் முதன் முதல் அறிவித்தபோது, எனக்கு ஆஸ்திபாஸ்திகள் ஒன்று மில்லை யென்று உள்ளபடி உரைத் திருக்கின்றேனல்லவா? சொத்து இல்லை யென்று சொல்லியது மாத்திரமே போதாது; அதனினுங் கேவலமான நிலைமையில் இருக்கிறே னென்று நான் கூறி யிருக்கவேண்டும்; ஏனெனில், நான் கடனும் பட்டிருக்கிறேன்" என்று பாசானியோ பதில் உரைத்தான்.

பிறகு, பாசானியோ முன்னல் விவரிக்கப்பட்ட விருத்தாந்தங்களை — அந்தோனியோவி னிடத்தில் தான் கடன் வாங்கியதையும், கையிற் பணமில்லாமற் அவன் ஷைலாக் கென்னும் யூதனிடத்தில் தனக்காகக் கடன் வாங்கிக் கொடுத்ததையும், அந்தப் பணத்தைக் குறிப் பிட்ட தொரு தினத்தில் திருப்பிக் கொடுக்காவிட்டால் அந்தோனியோ தன்னுடைய தேகத்தினின்றும் ஓர் இராத் தல் சதையை வெட்டி யெடுத்துக் கொடுப்பதாக அந்த யூதனுக்குப் பத்திரம் எழுதிக் கொடுத்திருப்பதையும் ஒவ் வொன்றாக எடுத்துரைத்தான்.

நடந்த சங்கதிகளை விவரித்த பின்னர், அந்தோனியோவினிடத்திலிருந்து வந்த கடிதத்தைப் போர்ஷியாவுக்குப் பாசானியோ வாசித்துக் காண்பித்தான். அது வருமாறு: "இன்னுயிரன்ன பாசானியோ! என்னுடைய கப்பல்களெல்லாம் மூழ்கிப் போயின; அந்த யூதனுக்கு நான் எழுதிக் கொடுத்திருக்கிற பத்திரத்தின் நிபந்தனை நிறைவேற வேண்டியதாயிருக்கின்றது; அந்த நிபந்தனையின்படி அவனுடைய பணத்திற்கு ஈடு செலுத்துமளவில், நான் உயிர்த்திருக்க முடியாதாதலின், என்னுடைய மரணத் தருவாயில் உன்னைப் பார்க்க விரும்புகின்றேன். ஆயினும், உன்னுடைய இஷ்டம்போலச் செய். உனக்கு என் மீதுள்ள அன்பினால் நீ வராத பக்ஷத்தில், நான் இந்தக் கடிதம் எழுதியதற்காக வரவேண்டியதில்லை."

அந்தக் கடிதத்தின் கருத்தை உணர்ந்து, போர்ஷியா அங்கம் பதைத்துப் பாசானியோவை நோக்கி, "என் அருமைக் காதல! மற்றெல்லாக் காரியங்களையும் நிறுத்திவிட்டு, உடனே புறப்பட்டுப் போ. என்னுடைய பாசானியோவின் குற்றத்தினால் இவ்வரிய நண்பனுக்கு ஒரு மயிர்ச்சேதங் கூட நேருமுன்னர், அவன் கொடுக்கவேண்டிய பணத்திற்கு இருபது மடங்கான தொகையை எடுத்துக் கொண்டு போ. இவ்வளவு அருமையாக உன்னை நான் பெற்றிருக்கின்றமையின், அவ்வளவு அருமையாகவே உன்னை நான் ஆசிக்கின்றேன்" என்று விரைந்து கூறினாள்.

பாசானியோ புறப்பட்டுப்போகுமுன், போர்ஷியாவினுடைய சொத்துகளுக்கு அவனுக்குச் சட்டத்தின்படி உரிமை ஏற்படும் பொருட்டு, உடனே பாசானியோவைக் கலியாணஞ் செய்துகொள்வதாகப் போர்ஷியா தீர்மானித்தாள். அன்றைய தினமே அவர்களிருவருக்கும் விவாகம் நடந்தது; கிரேஷியானோவும் நேரிசாவை மணந்தான்.

விவாகம் நடந்தவுடனே பாசானியோவும் கிரேஷியானோவும் மிக விரைந்து வேனீசுக்குப் புறப்பட்டார்கள். அங்கே போய்ச் சேர்ந்தபோது, அந்தோனியோ சிறையில் அடை பட்டிருக்கப் பாசானியோ கண்டான்.

பணஞ்செலுத்த வேண்டிய கெடு தவறிப்போய் விட்டது. பாசானியோ கொடுக்க வந்த பணத்தை அந்தக் கொடிய யூதன் ஏற்காமல், அந்தோனியோவின் தசையில் ஓர் இராத்தல் எடுத்துக்கொள்ளவேண்டு மென்று பிடிவாதம் பண்ணினான். திகிலினால் அதிரச் செய்யத்தக்க இந்த வழக்கை வேனீசுப் பிரபுவின் நியாய சபையில் விசாரணை செய்வதற்கு நாள் குறிக்கப்பட்டது. அந்த விசாரணை எப்படி முடியுமோவென்று பாசானியோ ஏக்க முற்று ஊக்க மழிந்து உடல் நடுங்கிக்கொண் டிருந்தான்.

அந்தோனியோவைப் பார்ப்பதற்குத் தன் கணவனை வழியனுப்புகையில் போர்ஷியா அவனுக்கு உற்சாக மூட்டத் தக்க வசனங்களை மொழிந்தாள்; அவன் திரும்பி வரும்பொழுது தன் அருமை நண்பனையும் அழைத்துக் கொண்டு வரவேண்டு மென்றாள்.

பாசானியோவி னிடத்தில் அவ்வளவு தைரியமாகப் பேசியும், அந்தோனியோவுக்குப் பிராண ஹானி நேரிடு மென்று போர்ஷியா உள்ளூற அஞ்சினாள். கணவன் புறப் பட்டுப் போனபிறகு தனியே இருக்கையில், பாசானியோ வின் அருமை நண்பனது உயிரை எவ்விதத்திலேனும் காப் பாற்றுவதற்குத் தன்னால் இயலுமோ வென்று அவள் தனக்குள்ளே ஆலோசித்துப் பார்க்கத் தொடங்கினாள்.

பாசானியோவைக் கௌரவிக்கக் கருதிய காலத்தில் அவள் மனைவிக் குரிய அடக்க ஒடுக்கச் சிறப்புக்களுடன், தான் அபலை யென்றும் அறிவிலி யென்றும், எல்லா விஷயங்

களிலும் அவனே தனக்கு வழிகாட்டி அவனுடைய பேரறி வினால் தன்னை நடத்திக் காக்க வேண்டுமென்றும் அவள் கூறியிருந்தாளல்லவா?

இப்பொழுது தன் கொழுநனுடைய நண்பனுக்கு நேர்ந்துள்ள பிராணாபத்தினால் அவள் தானாகவே பிரவர்த் திக்க வேண்டி வந்தமையின், தன்னுடைய சாமர்த்தி யத்தைப்பற்றி அவள் சிறிதும் ஐயுறவில்லை. அவள் தன்னுடைய சொந்த புத்தியையும் ஆலோசனையையுங் கொண்டே, வேனீசுக்குப் போய் அந்தோனியோவுக்குப் பரிந்து நியாய சபையில் வாதிக்கத் தீர்மானித்தாள்.

போர்ஷியாவின் உறவினன் ஒருவன் வக்கீலாக இருந் தான். அவனுடைய பெயர் பெல்லாரியோ. அந்தோனி யோவின் நிலைமையை எடுத்துரைத்து, அவனுக்கும் ஷைலாக்குக்கும் உள்ள வழக்கைப்பற்றி அவனுடைய அபிப்பிராயம் தெரியவேண்டுமென்று போர்ஷியா அந்த வக்கீலுக்குக் கடிதம் எழுதினாள். தன்னுடைய அபிப் ராயத்தைச் சொல்வதன்றி, அந்தோனியோவின் பக்ஷமாக வாதிக்கவேண்டிய முறையையும் எழுதி, வக்கீல் தரித்துக் கொள்ளும் உடுப்பையும் அனுப்பிக் கொடுக்கவேண்டு மென்று பெல்லாரியோவைக் கேட்டாள். அவள் விரும் பியபடியே, அந்தோனியோவுக்குச் சார்பாக எடுத்துரைக்க வேண்டிய விஷயங்களையும், வாதிக்கவேண்டிய முறையை யும் விவரமாகப் பெல்லாரியோ எழுதித் தன்னுடைய வக் கீல் உடுப்பையும் மற்ற அங்கங்களையும் அனுப்பினான்.

போர்ஷியாவும் அவளுடைய சேடியாகிய நேரிசாவும் ஆண்வேஷம் தரித்துக்கொண்டார்கள். வக்கீல் உடுப்பைப் போர்ஷியா அணிந்துகொண்டு, நேரிசாவைத் தன்னுடைய குமாஸ்தாவாக அழைத்துக்கொண்டாள். உடனே புறப்

பட்டு அவர்களிருவரும் விசாரணை நடக்கும் தினத்தன்று வேனீஸ் நகரத்துக்கு வந்து சேர்ந்தார்கள். நியாயாதிபதியும் ஆலோசனைச் சபையினர்களும் அந்த வழக்கை விசாரித்துத் தீர்ப்பதற்காகக் கச்சேரியிற் கூடி யிருந்தார்கள். அப்பொழுது,

நியாயாதிபதி — என்ன, அந்தோனியோ வந்திருக்கிருனு?

அந்தோனியோ — இதோ இருக்கிறேன், பிரபுவே! ஸித்தமாயிருக்கிறேன்.

நியாயாதிபதி — உன்னைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கின்றது. கன்னெஞ்சனுக்குப் பதில் சொல்ல வந்திருக்கின்ருய். அவனே சண்டாளன், மானிடப் பிறவியிற் சேர்ந்தவ னல்லன்; ஈரமும் இரக்கமும் இலவலேசமும் இல்லாதவன்; கருணை யென்பதைக் கனவிலுங் காட்டி யறியாதவன்.

அந்தோனியோ — அவனுடைய கடுமையான எண்ணத்தை மாற்றி, அவனைச் சற்றுச் சாந்தப்படுத்துவதற்காகத் தாங்கள் பெரிதும் பிரயத்தனப் பட்டீர்களென்று கேள்விப்பட்டேன். ஆயினும், அவன் ஒரே முரட்டுப் பிடிவாதமாக இருக்கிருனே. அவனுடைய குரோதத்திற்கு நான் குறியாகாமல் தப்பித்துக் கொள்வதற்குச் சட்டப்படி வகையொன்றும் ஏற்படவில்லையே. ஆகையால், என்னுடைய சாந்தத்தைக்கொண்டு அவனுடைய உக்கிரத்தை எதிர்ப்பேனுக! அவனுடைய கோபாவேசத்தின் கொடுமையைத் தாள்வதற்குப் பரமசாந்தமே எனக்குக் கவசமாகுக!

நியாயாதிபதி — ஒருவன் போய், அந்த யூதனைக் கச்சேரிக்குள் கொண்டுவரட்டும்.

சாலேரியோ — வாயிலண்டை அவன் சித்தமாயிருக்கின்ருன். இதோ'வருகின்ருன், சுவாமீ! (ஷைலாக் பிரவேசித்தான்).

நியாயாதிபதி — இடம் விடுங்கள்; அவன் என் முன் நிற்கட்டும்.

ஏ ஷைலாக்! கடைசிக்கந்தாயம் வரையில் உன்னுடைய மச்சரத்தை இப்படிக் கொடுமையாக நீ சாதித்து வருவாயென்றும், முடிவில், இப்பொழுது நீ வெளிக்குக் காட்டுகிற விபரீதமான கொடுமையை ஒழித்து, அவ்வளவு விபரீதமாகவே கருணையும் பச்சாத்தாபமும் காட்டிக் கீர்த்தி பெறுவாய் என்றும் உலகமெல்லாம் நினைக்கின்றது, நானும் அப்படியே நினைக்கின்றேன். இந்த எளிய வர்த்தகனுடைய தசையில் ஓர் இராத்தல் வேண்டுமென்று கட்டாயப்படுத்தாமல் நீ விடுவதன்றி, பூததயையும் பச்சாத்தாபமுங் கொண்டு அவன் உனக்குக் கொடுக்கவேண்டிய தொகையிலும் சிறிது பாகம் தள்ளிக் கொடுப்பாயென்று நினைக்கின்றோம். இப்பொழுது அவனுக்கு நேர்ந்திருக்கிற பெருந் திரவிய நஷ்டமானது எப்படிப்பட்ட பணக்காரனையும் கவிழ்க்கத்தக்கது, எப்படிப்பட்ட கன்மனத்தையும் கரைக்கத் தக்கது. நீ சுமுகமாகப் பதில் சொல்லுவாயென்று எல்லோரும் எதிர்பார்க்கின்றோம்.

ஷைலாக் — என்னுடைய கருத்தை ஏற்கெனவே தங்களுக்குத் தெரிவித் திருக்கிறேன். பத்திரத்தின்படி எனக்குச் சேரவேண்டிய அபராதத்தை வசூல் செய்யாமல் விடுவதில்லை யென்று நான் பிரதிக்கினை செய்திருக்கின்றேன். என்னுடைய உரிமையை மறுப்பீர்களானல் உங்களுடைய செங்கோல்விருதும் நகரசுவாதந்திரியமும் பாழ் படும்.

மூவாயிரம் தூக்கட்டுகளுக்குப் பதிலாக ஓர் இராத்தல் அழுகற்றசை வேண்டுமென்று நான் விரும்புவதென்னே வென்று நீங்கள் வினவக் கூடும், அதற்கு நான் விடைபகரேன். அஃது என்னுடைய இஷ்டம்; அந்தப் பதில் போதுமா? என்னுடைய வீட்டில் எலி தொந்தரவு படுத்தினல், அதனைப் பிடிப்பதற்குப் பதினயிரம் தூக்கட்டுகள் கொடுக்கிறேன். அஃது என்னுடைய இஷ்டம். அதனல் உங்களுக் காவ தென்ன ? உங்களுடைய கேள்விக்குப் பதில் வந்துவிட்டதா ?

பன்றி வாயைத் திறந்தாற் சிலருக்குப் பிடிக்காது; பூனையைக் கண்டாற் சிலர் பித்துப்பிடித்துப் போவார்கள். ஒத்து ஊதினல் சிலர் மூத்திரம் பெய்து கொள்வார்கள். மனேவிகாரமென்பது ஆசாபாசங்களுக்கு அதிஷ்டான தேவதை; அது தன் இஷ்டப்படி விருப்பு வெறுப்புக்களை அமைத்துக் கொள்கின்றது. இனி உங்களுடைய கேள்விக்குப் பதில் சொல்லுகின்றேன். பன்றி வாயைத்திறந்தால் ஒருவன் பொருக்கமாட்டாததற்கும், தீமை யொன்றுஞ் செய்யாத பூனையைக் கண்டால் மற்றொருவன் பயந்து வெறி கொள்வதற்கும், ஒத்து ஊதினல் உடல் நடுங்கி வேறொருவன் மூத்திரம் பெய்துகொள்வதற்கும் நிலையான காரணமொன்றும் இல்லை. ஒவ்வொன்றைக் கண்டால் ஒவ்வொருவனுக்குக் கோபம் உண்டாகின்றது. பிறர் பார்த்து நகைத்தாலும், கோபங் கொண்டாலும், அவன் தன்னுடைய அருவருப்பைக் காட்டாதிருக்க முடியாது. அதுபோல, நானும் காரணமெதுவும் சொல்ல முடியாது; காரணம் ஒன்றும் சொல்லவும் மாட்டேன். ஒரு சங்கதி மாத்திரம் சொல்லுவேன் ; அந்தோனியோவின்மீது எனக்கு நெடுநாளாகப் பகையும் ஒருவிதமான வெறுப்பும் உண்டு ; அதனல் அவன்மீது இந்தப் பாழ்

வழக்குத் தொடர்கின்றேன். இந்தப் பதில் உங்களுக்குத் திருப்தியா யிருக்கின்றதா?

பாசானியோ — இது மறுமொழி யாகாது, இறங்கா வன்நெஞ்சா! உன்னுடைய கொடுமையைச் சாதிப்பதற்கு இது போதுமான காரணமாகாது.

ஷைலாக் — என்னுடைய மறுமொழியினால் உன்னைத் திருப்திப் படுத்தவேண்டிய கட்டாயம் எனக்கு இல்லை.

பாசானியோ — மனிதர்கள் தங்களுக்கு பிரியமில்லாதவைகளை யெல்லாம் கொன்று விடுகிறார்களா?

ஷைலாக் — தான் கொல்லாததொன்றை ஒரு மனிதன் வெறுப்பானா? எந்தக் குற்றமானாலும் அது முதலில் வெறுப்பாக இருப்பதில்லையே.

பாசானியோ — நீ சொல்வது ஆச்சரியமா யிருக்கின்றது. பாம்பு ஒரு தடவை கடித்தால் போதாதா? அது இரண்டாந்தடவை கடிக்கிற வரையில் காத்திருக்க வேண்டுமா?

அந்தோனியோ — அந்த யூதனோடு வாதித்து அவனுக்கு நியாயமெடுத்துக் காட்ட முடியுமென்று நினைக்கிறாயா? அதைவிட, கடற்கரையிற் போய் நின்றுகொண்டு அலைகளைப் பார்த்து 'அவ்வளவு உயர்ந்து வாராதே; சற்றுத் தணிந்து வா' என்று சொல்லலாம். 'என் குட்டியைப் பறிகொடுத்தேன்' என்று ஆடு கதறும்படி ஏன் செய்தாய் என்று ஓநாயைக் கேட்டாலும் கேட்கலாம். காற்று மும்முரமாக அடிக்கும்பொழுது உயர்ந்தோங்கி நிற்கும் மரங்களைப் பார்த்து 'தலையை அசைக்காதே; சலசலக்காதே' என்று சொன்னாலும் சொல்லலாம். எல்லாவற்றிலுங் கடினமானதாகிய அவனுடைய யூத மனத்தை இளக்

கப் பிரயத்தனப் படுவதினும் வேறு எவ்வளவு கடினமான காரியத்தையுஞ் செய்யலாம். அது வன்னெஞ்சோ, இரங்காத மர நெஞ்சோ, இரும்பு நெஞ்சோ, வைரக்கன்னெஞ்சோ, எத்தன்மையுள்ளதென்று வரை யறுப்பது அரிது.

ஆகையால், நான் உன்னை வேண்டிக்கொள்ளுகிறேன்; இனி அவனுக்கு ஒன்றுஞ் சொல்லாதே; அவனுடைய எண்ணத்தை மாற்றுவதற்கு வகை தேடாதே. காரியம் எவ்வளவு சுருக்கமாகவும் தெளிவாகவும் நடக்கக்கூடுமோ அவ்வளவு சீக்கிரத்தில் ஆடம்பரமில்லாமல் நடக்கட்டும். எனக்குரிய தண்டனை எனக்கு விதிக்கப்படட்டும்; யூதன் தன்னுடைய இஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்ளட்டும்.

பாசானியோ — உனக்குக் கொடுக்கவேண்டிய மூவாயிரம் தூக்கட்டுகளுக்கு இதோ ஆறுயிரம் தூக்கட்டுகள் வாங்கிக்கொள்.

ஷைலாக் — அந்த ஆறுயிரம் தூக்கட்டுகளில் ஒவ்வொன்றும் ஆறு பகுதிகள் உடையதாய், அந்தப் பகுதி ஒவ்வொன்றும் ஒவ்வொரு தூக்கட்டாய் இருப்பினும், அவைகளை நான் ஏற்றுக்கொள்ளமாட்டேன்; என்னுடைய பத்திரத்திற் கண்ட ஈடே எனக்கு வேண்டும்.

நியாயாதிபதி — நீ கருணை காட்டாவிட்டால், உனக்கு மாத்திரம் கடவுள் கருணை காட்டுவாரா?

ஷைலாக் — நான் குற்றம் ஒன்றும் செய்யாதிருக்கக் கடவுளின் தண்டனைக்குப் பயப்படுவானேன்? நீங்கள் எத்தனையோ அடிமைகளை விலைக்கு வாங்கி யிருக்கிறீர்கள். அவர்களை உங்களுடைய கழுதைகளையும் குதிரைகளையும் நாய்களையும்போல இழிவான வேலைகளில் நியமிக்கிறீர்கள். ஏனென்றால், அவர்களை நீங்கள் வாங்கிவிட்டீர்களென்று

சொல்லுகிறீர்கள். 'அவர்களைச் சுவேச்சையாக விட்டு விடு, அவர்களை உங்களுடைய புத்தார்களுக்கும் புத்திரிகளுக்கும் கலியாணஞ் செய்வி' என்று நான் உங்களுக்குச் சொல்லலாமா?

'சுமைதாங்காமல் அவர்கள் வியர்த்து ஒழுகுகிறார்களே. அஃது ஏன்? உங்களுக்கு இருப்பதுபோல, அவர்களுக்கும் மிருதுவான பஞ்சணை மெத்தைகள் கொடுத்துப் படுக்க வை; நீங்கள் புசிப்பதுபோல, அவர்களுக்கும் ருசிகரமான உணவுகள் கொடு' என்று நான் சொன்னால், 'அவர்கள் எங்களுடைய அடிமைகள்; எங்களுடைய உரிமைகள்' என்று நீங்கள் பதில் சொல்லுவீர்க ளல்லவா? அதுபோலவே, நானும் உங்களுக்குப் பதில் சொல்லுகின்றேன்.

அவனிடத்தில் நான் கேட்கிற ஓர் இராத்தல் தசையானது பெருவிலை கொடுத்து வாங்கப் பெற்றது. அஃது என்னுடையது; எனது உரிமை; அஃது எனக்குக் கிடைத்தே தீரவேண்டும். அதனை எனக்கு நீங்கள் கொடுப்பிக்க மறுப்பீர்களானால், உங்களுடைய சட்டம் மண்ணாய்ப் போகுக! வேனீஸ் நகரத்துச் சட்டங்கள் வலியற்று வீண் ஆகுக! எனக்குத் தீர்ப்புச் சொல்லுங்கள்; என்னுடைய கேள்விக்குப் பதில் உரையுங்கள்; என்னுடைய பத்திரத்தின்படி எனக்கு நியாயந் தீர்க்கப்போகிறீர்களா இல்லையா?

பிரபு — இந்த நியாயத்தைத் தீர்ப்பதற்குப் பெல்லாரியோ என்னும் சிறந்த வித்துவானை இங்கே வரும்படி சொல்லியனுப்பி யிருக்கிறேன். அவன் இன்றைக்கு வராவிட்டால், இந்தக் கச்சேரியைக் குலைத்து விடலாம்.

சாலேரியோ — மகாப் பிரபுவே! அந்தப் பண்டிதனிடத்தி லிருந்து ஒருவன் கடிதங்கள் கொண்டுவந்து

வெளியே காத்திருக்கின்றான். அவன் பாதுவாவினின்று இப்பொழுதே வந்தான்.

நியாயாதிபதி — அந்தக் கடிதங்களைக் கொண்டுவா. வந்திருக்கிற மனிதனைக் கூப்பிடு.

பாசானியோ — அந்தோனியோ! விசனப்படாதே, தைரியமாக இரு. எனக்காக உன்னுடைய இரத்தத்தில் ஒரு பொட்டு சிந்துமுன் இந்த யூதனுக்கு என்னுடைய தசை, இரத்தம், எலும்புகள், மற்றெல்லாமும் கொடுக்கிறேன்.

அந்தோனியோ — மந்தைக்குள் வியாதிப்பட்டதும், விதையடிக்கப்பட்டதும், சாவுக்கு ஏற்றதுமாயிருக்கிற ஆட்டுக்கடா நானே. மரத்தில் மிகவும் பலவீனமான பற்றுக்கொண்டு தொங்கும் காயே மற்றவைகளைவிடச் சுலபமாகத் தரையில் வீழும். அதுபோல, நானும் வீழ்வேனாக. பாசானியோ! நீ இன்னுஞ் சிறிது காலம் ஜீவித்திருந்து என்னுடைய சாமகவி எழுதுவாயாக. அதனினுஞ் சிறந்த காரியம் நீ செய்யத் தக்கது ஒன்றுமில்லை.

வக்கீல் குமாஸ்தாவைப்போல ஆடை உடுத்துக் கொண்டு நேரிசா நியாய சபைக்குள் வந்தாள்.

நியாயாதிபதி — நீ பாதுவாவினின்று வருகின்றாயா? பெல்லாரியோ விடத்தினின்று வருகின்றாயா?

நேரிசா — ஆம், ஆம், பிரபுவே! பெல்லாரியோ தங்களுக்கு வந்தனம் சொல்லி இந்தக் கடிதத்தைக் கொடுக்கச் சொன்னார் (ஒரு கடிதத்தை நியாயாதிபதிக்குக் கொடுத்தாள்).

பாசானியோ — நீ என் அவ்வளவு ஊக்கமாகக் குதிக்காலிற் கத்தியைத் தீட்டுகின்றாய்?

ஷைலாக் — அதோ நிற்கிற கடன்காரனுடைய தேகத்தினின்று என்னுடைய பத்திரத்தின்படி தசையை நறுக்கி யெடுப்பதற்காக.

கிரேஷியானோ — ஏ காலகண்டா! கன்னெஞ்சுடைய யூதா! நீ இப்பொழுது கத்தியைத் தீட்டுவது உன்னுடைய குதிக்காலி லன்று, உன்னுடைய உயிர்க் காலிலே யாகும். ஆனல், எந்த லோஹமானாலும், கொலையாளியின் கைக் கோடரியானாலும், உனது கொடிய பொறாமையைப் போலக் கூர்மையாக இராது. பிரார்த்தனைகள் உன் மனத்தைப் பேதித்து உள்ளே புகாவோ?

ஷைலாக் — உன்னுடைய சமத்கார வார்த்தைகள் எவையும் என்னிடத்திற் பலியா.

கிரேஷியானோ — நீ நாசமாய்ப் போக, இணங்காச் சுணங்கனே! நீ இப்படிப்பட்ட ஜன்ம மெடுத்ததற்கு நியாய மென்னவோ தெரியவில்லை. மிருகங்களின் ஆத்மாக்கள் மனிதர்களின் உடல்களிற் புகுகின்றன என்று சொல்லுகின்றார்களே. அஃது உண்மையே போலும். நீச நாயின் தன்மை வாய்ந்த உனது ஆத்மாவானது முன் ஜன்மத்தில் ஓநாயினுடையதாய் இருந்திருக்கவேண்டும். மனிதனைக் கொன்றதற்காக அந்த ஓநாயைத் தூக்கிலிட்ட போது அந்த உடலில் வியாபித்திருந்த கொடிய ஆத்மாவானது அதனின்றும் வெளிப்பட்டுக் கடுகிச் சென்று, சண்டாளியாகிய உன்னுடைய தாயின் கருப்பத்தில் நீ தங்கியிருக்கையில், உன் உடலுக்குள் பிரவேசித்திருக்கவேண்டும். ஏனெனில், உன்னுடைய இச்சைகளெல்லாம் ஓநாயைப் போன்று, இரத்த வெறி பிடித்துப் பட்டினியினாற் பசித்துக் கொள்ளைக் குணம் மேலிட்டு இருக்கின்றன.

ஷைலாக் — என்னுடைய பத்திரத்தில் பதிந்திருக்கிற முத்திரையை உன்னுடைய வசைச் சொற்களினுல் நீக்கிவிடப் போகிருயா ? இவ்வளவு உரத்துப் பேசுவதனுல் உன்னுடைய மூச்சுக்குச் சேதம். நிதானமாகப் பேசு; இன்றேல், இளைஞா! குணப்படுத்தமுடியாத சுவாஸ நோயிற் படுவாய். அவ்வளவு கடுத்துக் கொள்ளாதே. சட்டத்தின்படி நடப்பதற்காக நான் இங்கே வந்திருக்கின்றேன்.

நியாயாதிபதி — இந்தக் கடிதத்தில் பெல்லாரியோ கல்வியிற் சிறந்த இளைஞன் ஒருவனைச் சிபார்சு செய்திருக்கின்ருன். அவன் எங்கே ?

நேரிசா — அவர் இதோ பக்கத்தில் நின்றுகொண்டிருக்கின்ருர். உங்களுடைய கச்சேரியில் அவர் வாதிப்பதற்கு இடங் கொடுப்பீர்களா என்று உங்கள் மறுமொழியைத் தெரிந்துகொள்ளக் காத்திருக்கின்ருர்.

நியாயாதிபதி — அந்தக் கலைஞன் எமது கச்சேரியில் நியாயவாதம் செய்வதில் எமக்கு நிரம்பச் சந்தோஷம். நீங்கள் மூன்று நான்கு பேர் போய் அந்தக் கலைஞனை மரியாதைகளுடன் இவ்விடத்திற்கு அழைத்து வாருங்கள். அதற்குள்ளாக பெல்லாரியோ எழுதியுள்ள கடிதத்தை இந்தச் சபையார் கேட்கட்டும்.

குமாஸ்தா — (அந்தக் கடிதத்தைப் படிக்கின்ருன்) "பிரபுவே! நீங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. எனக்கு உடம்பு மிகவும் அசௌக்கியமாயிருக்கின்றது. ஆனல், உங்களுடைய கடிதம் வந்த சமயத்தில் ரோமா புரியினின்று சிறந்த வாலிபக் கலைஞன் ஒருவன் நட்பினுல் என்னைப் பார்க்க வந்திருந்தான். அவனுடைய பெயர் பால்த்தசார். யூதனுக்கும் அந்தோனியோவுக்கும் உள்ள

வழக்கை அவனுக்கு நான் எடுத்துரைத்தேன். நாங்கள் இருவரும் பல பல புத்தகங்களைப் புரட்டிப் பார்த்தோம். என்னுடைய அபிப்பிராயம் இன்னதென்று அவனுக்குத் தெரிவித்திருக்கின்றேன். அவனோ புத்தியும் ஊகையும் படிப்பும் திறமையும் மிகுந்தவன். அவனுடைய யோக்கியதையை என்னால் எடுத்துரைக்க முடியாது. என்னுடைய அபிப்பிராயத்தைக் கைக்கொண்டு தன்னுடைய புத்தி விசேஷத்தினால் அவன் அதை மிகவும் சீராகவும் சிறப்பாகவும் விளக்குவான் என்று நம்புகின்றேன். நான் இப்பொழுது கச்சேரிக்கு வரமுடியாத நிலைமையில் இருப்பதனால், என்னுடைய வேண்டுகோட்கிணங்கி அவன் எனக்குப் பதிலாகத் தங்களுடைய விருப்பத்தை ஈடேற்ற வருகின்றான். அவன் வயதிற் சிறியவனாக இருக்கிறானென்னுங் காரணத்தினால் அவனுடைய யோக்கியதைக்குத் தக்கபடி மரியாதை செய்யாதிருக்கவேண்டாம். அவனுடைய உடல் சிறிதேயன்றி, மூளை பெரிது. இவ்வளவு இளம் பருவத்தில் இவ்வளவு முதிர்ந்த புத்தி வாய்ந்துள்ளவர்களை நான் இதுகாறுங் கண்டதில்லை. மூர்த்தி சிறியதாயினும், கீர்த்தி பெரிது; கடுகு சிறுத்து இருப்பினும், காரம் பெருத்திருக்கின்றதன்றே? அவனைத் தாங்கள் தயவுசெய்து எனக்குப் பதிலாக ஏற்றுக் கொள்வீர்களென்று நம்புகின்றேன். நான் சொல்லுவதை விட, அவன் விசாரணை நடத்தும் பொழுது அவனுடைய யோக்கியதை நன்கு வெளிப்படும்.''

நியாயாதிபதி — பண்டிதனாகிய பெல்லாரியோ என்ன எழுதியிருக்கிறன் கேட்டீர்களா? அவன் குறிப்பிட்ட கலைஞர் இதோ வருகின்றாரே (சட்டப் பரீக்ஷைகளில் தேர்ந்த கலைஞனைப்போல உடுப்புத் தரித்து போர்ஷியா வந்தாள். அவளைப் பார்த்து) நீர் பெல்லாரியோவினிடத்திலிருந்து வந்தீரா?

போர்ஷியா — ஆம், பிரபுவே.

நியாயாதிபதி — வாரும்; அந்த ஆசனத்தில் அமரும். இந்தக் கச்சேரியில் இப்பொழுது விசாரணைக்கு வந்திருக்கிற வழக்கு இன்னதென்று உமக்குத் தெரியுமா?

போர்ஷியா — அந்த வழக்கின் விஷயமெல்லாம் எனக்கு நன்றாகத் தெரியும். இங்கே வர்த்தகன் எவன், யூதன் எவன்?

நியாயாதிபதி — அந்தோனியோவும் கிழ ஷைலாக்கும் எழுந்து நில்லுங்கள்.

போர்ஷியா — உன் பெயர் ஷைலாக்கா?

ஷைலாக் — என் பெயர் ஷைலாக்கு.

போர்ஷியா — நீ தொடர்கிற வழக்கு மிகவும் புதுமையா யிருக்கின்றது. ஆயினும், நீ போகிற வழியில் எந்த விதத்திலும் வேனீசு நாட்டுச் சட்டம் உன்னைத் தடுக்க முடியாது.

அவன் உன்னைக் கெடுத்துவிடக்கூடிய நிலைமையில் நீ இருக்கின்றா யல்லவா?

அந்தோனியோ — ஆம், அவன் அப்படித்தான் சொல்லுகின்றான்.

போர்ஷியா — இந்தப் பத்திரத்தை ஒப்புக்கொள்ளுகின்றாயா?

அந்தோனியோ — ஒப்புக்கொள்ளுகின்றேன்.

போர்ஷியா — அப்படியானால், யூதன் கருணை செய்ய வேண்டியதே.

ஷைலாக் — நான் கருணை செய்யவேண்டுமென்பது என்ன கட்டாயம்? அதை எனக்குச் சொல்லும்.

போர்ஷியா — கருணை என்பது கட்டாயத்தினால் உண்டாவதன்று. அது, மிருதுவான மழைத் துளியைப் போல, விண்ணினின்றும் மண்ணின்மீது வீழ்வது; இரட்டைப் புகழ் படைத்தது; அளிப்பவனையும் வாழ்த்தி ஏற்பவனையும் வாழ்த்தி மேன்மைப் படுத்துகின்றது. அது வலிமிகுந்தாரிடத்து வலிமிகுந்து விளங்குகின்றது; சிங்காசனாதிபதியினிடத்து அவனுடைய கிரீடத்தினுஞ் சிறந்து விளங்கத்தக்கது. அவனுடைய செங்கோல் லௌகிகாதிகாரத்தின் வலியையே விளக்கும்; படாடோபத்திற்கும் பயங்கரத்திற்கும் அறிகுறியாகும்; அதைக் கண்டே அரசர்களிடத்துப் பயமும் பிரீதியுங் கொள்ளுவார்கள். ஆனால், கருணையோ வெனின், அது செங்கோல் ஆட்சியினும் உயரியது: அரசர்களின் உள்ளத்தில் உறைவது; கடவுளுக்கே லக்ஷணமாய் உள்ளது.

நியாயமானது கருணையுடன் கலந்து வர்த்திக்குமானால், மானிடனது சக்தி தேவனுடையதுபோல விளங்கும். ஆகையால், யூதனே! நியாயத்தின்படியே நடக்க வேண்டுமென்பது உன்னுடைய வாதமாயினும், நான் சொல்வதைச் சற்று ஆலோசித்துப் பார்: நியாயத்தையே தொடர்வதனால் நம்மெவருக்கும் மோக்ஷமில்லை; நியாயப்படிப் பார்த்தால் ஒரு மனிதனுக்கும் மோக்ஷமளிக்கக் கூடாதென்று ஏற்படும். ஆகையால், நாமெல்லோரும் கருணை பாலிக்கவேண்டு மென்று கடவுளைப் பிரார்த்திக்கின்றோம். அப்படி நாம் பிரார்த்திப்பதனாலே, நாமும் மற்றவரிடத்துக் கருணை காட்டவேண்டுமென்று ஏற்படவில்லையா? நமக்கு மாத்திரம் கருணை வேண்டுமென்று பிரார்த்திக்கும்பொழுது, மற்றவரிடத்துக் கருணை காட்டாத நமக்குக் கடவுள் கருணை காட்டுவாரா? நான் இவ்வளவு தூரம் சொல்லியதும் உன்னுடைய வழக்கின் நியாயத்தினால்

ஏற்படுகிற கடுமையைச் சற்றுக்குறைக்கும் பொருட்டாகும். உன்னுடைய நியாயத்தையே நீவற்புறுத்துவாயானால், கண்டிதமாக விவகாரங்களை நடத்தும் இந்த வேனீஸ் நகரத்து நியாய சபையார் அந்தோனியோவுக்கு விரோதமாகத் தீர்ப்புச் செய்யவேண்டும்.

ஷைலாக் — என் வினைகள் என் தலையோடு! என் பத்திரத்தின்படி எனக்குச் சேரவேண்டிய அபராதத்தைக் கொடுக்கும்படி தீர்ப்புச் செய்ய வேண்டுகிறேன். சட்டத்தின் முறைப்படி எனக்குத் தீர்ப்பு வேண்டும்.

போர்ஷியா — அந்தப் பணத்தைக் கொடுப்பதற்கு அவனுக்குச் சக்தி யில்லையா?

பாசானியோ — இதோ இந்தச் சபையிலேயே அந்தப் பணத்தைக் கொடுக்கிறேன்; அதற்கு இரண்டு மடங்கு கொடுக்கிறேன். அதுவும் போதாதெனின், அதைப்போலப் பத்து மடங்கு கொடுப்பதற்கு உடன்படுகிறேன். அப்படிக் கொடுக்காவிட்டால் என் கை, தலை, நெஞ்சு ஆகிய இவைகளை இழப்பதற்கு உடன்படுகிறேன். இதுவும் போதாவிட்டால், குரோதம் மிகுந்து உண்மையை அமுக்கி நசுக்குவதற்குப் பிரயத்தனப்படுகின்றான் என்பது தெளிவு.

ஆகையால், சட்டத்தை ஒதுக்கிவைத்து உங்களுக்குரிய அதிகாரத்தை இந்த விஷயத்திற் கைக் கொள்ளப் பிரார்த்திக்கிறேன். ஒரு பெரிய நன்மை செய்வதற்காக இந்தச் சிறிய தவறு செய்யுங்கள்; இந்தக் கொடிய பிசாசின் துஷ்ட எண்ணத்தை அடக்குங்கள்.

போர்ஷியா — அஃது அப்படி ஆகாது. வழக்கமாக ஏற்பட்டிருக்கிற சட்ட முறையை மாற்றுவதற்கு வேனீ

சில் எவருக்கும் அதிகாரமில்லை. இப்பொழுது அப்படிச் செய்தால், இதை உதாரணமாகக் கொண்டு இனிமேல் அநேக விஷயங்களில் சட்டத்தை நிராகரித்து நியாயாதிபதிகள் தங்களுடைய இஷ்டம்போலச் செய்வதற்காகும்; துரைத்தன விவகாரம் பாழடையும். ஆதலால், அப்படிச் செய்தல் தகாது.

ஷைலாக் — தர்மராஜாவே இந்த நியாயந் தீர்ப்பதற்கு வந்திருக்கிறான்! ஓ தர்மராஜா! இளைஞனே, உன்னுடைய நியாய வாதத்தை எவ்வளவென்று கொண்டாடுவேன்!

போர்ஷியா — எங்கே, உன்னுடைய பத்திரத்தை நான் பார்க்கட்டும்.

ஷைலாக் — இதோ இருக்கின்றது, வித்வச் சிகாமணியே! இதோ இருக்கின்றது.

போர்ஷியா — ஷைலாக்! உனக்குச் சேரவேண்டிய தொகையைப்போல மூன்று பங்கு கொடுப்பதற்குச் சித்தமா யிருக்கிறார்களே.

ஷைலாக் — பிரமாணம், பிரமாணம்; தெய்வ சாக்ஷியாக நான் ஒரு பிரமாணம் செய்திருக்கிறேன். அதனை நிறைவேற்றாமல் நான் பொய்யனாகவா? ஒருகாலுங் கூடாது; வேனீசு நகரமெல்லாம் கிடைப்பதாயிருப்பினும், அஃது ஆகாது.

போர்ஷியா — இந்தப் பத்திரத்தில் அபராதம் விதிக்கப்பட்டிருக்கின்றது. சட்டப்படி இதனை ஆதாரமாகக் கொண்டு, வர்த்தகனுடைய நெஞ்சுக் கருகிலிருந்து இந்த யூதன் ஓர் இராத்தல் தசையை வெட்டி எடுத்துக்கொள்ளலாம்.

ஷைலாக்! கருணைகூர்; மூன்றத்தனை பணம் வாங்கிக் கொள் இந்தப் பத்திரத்தைக் கிழித்து விடுவதற்கு அனுமதி கொடு.

ஷைலாக் — அதிற் கண்டபடி அபராதம் செலுத்தி விட்டால், அதைக் கிழிப்பதற்கு அனுமதி கொடுப்பேன். நீர் மிகவும் தேர்ந்த நியாயவாதியாகத் தோற்றுகின்றீர். சட்டம் உமக்கு நன்ருகத் தெரிகின்றது; அதனை நீர் எடுத்து உரைத்தது மிகவும் நேர்மையாக இருக்கின்றது. சட்டத்தை நிலை நாட்டுவதற்கு உம்மைவிடச் சிறந்தவர் வேறெவரு மில்லை. சட்டத்திற்கு நீரே ஊன்றுகோல். சட்டத்தின்படியே நீர் தீர்ப்புச் செய்விப்பீராக!

என்னுடைய கொள்கையை மாற்றுவதற்கு எவராலும் முடியாது; எவனுடைய வார்த்தையையும் மேற்கொள்ளேன். இது சத்தியம். எனக்கு இந்தப் பத்திரமே ஆதாரம்.

அந்தோனியோ — தீர்ப்புச் சொல்லும்படி நியாயாதிபதிகளை நான் மனப்பூர்வமாகப் பிரார்த்திக்கிறேன்.

போர்ஷியா — நன்று. அப்படியானுல், இது தான் தீர்ப்பு. அவன் கத்தியை நாட்டுவதற்கு உன்னுடைய மார்பை திறந்துகொண்டு சித்தமாக இரு.

ஷைலாக் — நெறிதவருத நியாயவாதியே! சிறப்பு மிகுந்த இளைஞனே!

போர்ஷியா — இந்தப் பத்திரத்திற் கண்டுள்ளபடி அபராதத்தைச் செலுத்தும்படி கட்டாயப் படுத்துவதே சட்டத்தின் கருத்தும் ஒழுங்கும் ஆகும்.

ஷைலாக் — உண்மையே! எவ்வளவு சிறந்த புத்தி, எவ்வளவு நேர்மையான நியாயம்! ஓ தேவனே! பார்

வைக்கு நீ இளைஞனாய் இருந்தாலும், புத்தியிலும் நியாயத்திலும் எவ்வளவு தேர்ந்த முதியோனாய் இருக்கின்றாய்!

போர்ஷியா — ஆகையால், உன் மார்பைத் திறந்து காட்டு.

ஷைலாக் — ஆ, நெஞ்சு அல்லவா? பத்திரம் அப்படித்தானே சொல்லுகின்றது; சிறந்த நீதிபதியே! அப்படியில்லையா? அதிலுள்ள வார்த்தைகள் 'அவனுடைய இதயத்திற்கு அடுத்து' என்பன அல்லவா?

போர்ஷியா — ஆம், அப்படித்தான். தசையை நிறுப்பதற்கு இங்கே தராசு இருக்கின்றதா?

ஷைலாக் — இதோ சித்தமாக வைத்துக்கொண்டிருக்கின்றேன்.

போர்ஷியா — ஏ ஷைலாக்! இரத்தமொழுகி அவனுக்குப் பிராணன் போகாமல் வெட்டுக் காயத்தை உடனே மூடிக் கட்டுவதற்கு ஒரு வைத்தியனைப் பக்கத்தில் நீ வரவழைத்து வைத்துக்கொள்ள வேண்டியது உன்னுடைய கடமையாகும்.

ஷைலாக் — பத்திரத்தில் அப்படிக் குறிக்கப்பட்டிருக்கின்றதோ?

போர்ஷியா — அப்படி வெளிப்படையாகக் குறிக்கப்படவில்லை; குறிக்கப்படாவிட்டாலென்ன? தர்மத்திற்காக நீ அவ்வளவு மாத்திரம் செய்யக்கூடாதா?

ஷைலாக் — அஃது என்னவோ எனக்குத் தெரியாது; அப்படிப்பட்ட வார்த்தை எதுவும் பத்திரத்தில் அகப்படவில்லை.

போர்ஷியா — ஓ வர்த்தகா! நீ சொல்லிக்கொள்ளத் தக்கது ஏதாவது உண்டா?

அந்தோனியோ — ஒன்றுமில்லை; நான் ஸித்தமாக இருக்கின்றேன்.

பாசானியோ! உன் கையைக்கொடு; நீ க்ஷேமமாக இரு. உனக்காக நான் இந்த கதி ஆனேனென்று சிந்தியாதே. ஏனென்றால், அதிர்ஷ்ட தேவதை வழக்கம்போல் இல்லாமல் என் விஷயத்தில் மிகுந்த அன்பு காட்டியிருக்கின்றாள். எப்படியெனில், ஒருவன் ஐசுவரியங்களை இழந்த பிறகு, அவன் முதிய வயதுவரையில் உயிர்த்திருந்து வறுமையினால் கண்கள் உள்ளே பொதிந்து, உருவம் சுருங்கி, உடல்வாடி மனம் வருந்தி நெடுநாள் கஷ்டப்படும்படி வைப்பது அவளுடைய வழக்கம், என் விஷயத்திலோ அவள் தயை கூர்ந்து அப்படிப்பட்ட கஷ்டத்திற்கு உள்ளாக்காமல் என்னை இப்பொழுதே யமபுரிக்கு அனுப்பி விடுகின்றாள்.

சீலவதியாகிய உன் மனைவிக்கு என்னைப் பற்றிச் சொல்லு; அந்தோனியோ உயிர்துறந்த வகையை அவளுக்கு விரித்துச் சொல்லு. உன்மீது நான் எவ்வளவு அன்பு வைத்திருந்தே னென்பதை எடுத்துரை; மரணாந்தரம் என்னைப் பற்றி நன்றாகச் சொல்வா யல்லவா? அந்தக் கதையை யெல்லாம் சொல்லி முடித்த பிறகு, பாசானியோவுக்குக் காதல் ஒருகால் இருந்ததோ இல்லையோ என்பதை அவளே ஆலோசித்துப் பார்க்கட்டும். நண்பனை இழக்கிறோமென்று நீ மாத்திரம் விசனப் படுவாய்; ஆனால், உனக்காகக் கடனைச் செலுத்துகிறோ மென்று அந்த நண்பன் விசனிக்கவில்லை. இந்த் யூதன் சற்று ஆழமாக வெட்டுவானாயின், அந்தக் கடனை நான் மனப் பூர்த்தியாக இப்பொழுதே செலுத்தி விடுகிறேன்.

பாசானியோ — ஏ அந்தோனியோ! எனக்கு ஒரு மனைவி இருக்கின்றாள்; அவள் எனக்கு உயிரே போன்றவள். ஆனால், என்னுடைய உயிரையும், மனைவியையும், இந்த உலகமுழுவதையும் உன்னுடைய பிராணனைவிட அதிகமாக நான் மதிக்கவில்லை. உன்னை விடுவிக்கக் கூடுமானால், எல்லாவற்றையும் இழக்கச் சித்தமாயிருக்கின்றேன், எல்லாவற்றையும் இந்தக் கொடும் பிசாசுக்குப் பலியிடச் சித்தமாயிருக்கின்றேன்.

போர்ஷியா — நீ இப்படிச் சொல்வதை உன் மனைவி இங்கே யிருந்து கேட்டுக்கொண்டிருந்தால் உன் மீது வருத்தப்பட மாட்டாளா?

கிரேஷியானோ — எனக்கு ஒரு மனைவி யிருக்கின்றாள்; என் பிராணனை யெல்லாம் அவளிடத்தே வைத்திருக்கின்றேன். அவள் இப்பொழுது தேவலோகத்தில் இருந்து அங்கேயுள்ள தேவதைகளைப் பிரார்த்தித்து நீசனான இந்த யூதனுடைய மனத்தை மாற்ற வல்லவளாக இருக்கலாகாதா?

மேரிசா — நல்லவேளையாக அவளில்லாத விடத்து இந்த வார்த்தையைச் சொன்னாயே. அவளுடைய காதிற் பட்டால், உன் வீடு இரு கூறாகுமே!

ஷைலாக் — இவர்களெல்லாரும் கிறிஸ்தவக் கணவர்கள். எனக்கொரு மகள் இருக்கின்றாள். அவளுக்கு இப்படிப்பட்ட கிறிஸ்தவன் கணவனாகாமல் வேறு எவனாவது கணவனாய் ஏற்படவேண்டுமாக! (மறுபுறம் திரும்பிப் பேசுகிறான்) நாம் காலத்தை வீண் போக்குகின்றோம். தீர்ப்புச் சொல்லும், ஐயாவே!

போர்ஷியா — அந்த வர்த்தகனுடைய தசையில் ஓர் இராத்தல் உன்னுடையது. இந்த நியாய சபையார் அதை

உனக்குத் தீர்ப்புச் செய்கின்றூர்கள், சட்டம் அதை உனக்கு அளிக்கின்றது.

ஷைலாக் — மிகவும் நேரிய நீதிபதியே !

போர்ஷியா — அந்தத் தசையை அவனுடைய மார்பினின்று நீ வெட்டி எடுத்துக்கொள்ள வேண்டும். சட்டம் அதற்கு ஒப்புகின்றது, இந்த நியாயசபை உனக்கு உத்தரவு கொடுக்கின்றது

ஷைலாக் — கல்வியில் தேர்ந்த கன நீதிபதியே ! தீர்ப்பு ! சொல்லுங்கள் ! சித்தமாக !

போர்ஷியா — சற்றுப் பொறு ; இன்னும் கொஞ்சம் இருக்கின்றது. ஒரு துளி இரத்தங்கூட இந்தப் பத்திரம் உனக்குக் கொடுக்கவில்லை. இதில் குறிக்கப்பட்டிருக்கிற சொற்கள் 'ஓர் இராத்தல் தசை. இதோ பத்திரத்தை எடுத்துக்கொள் ; உனக்குச் சேரவேண்டிய ஓர் இராத்தல் தசையையும் எடுத்துக்கொள். ஆனல், அதை வெட்டியெடுப்பதில், அந்தக் கிறிஸ்தவனுடைய இரத்தத்தில் ஒரு பொட்டுச் சிந்துவாயானல், உன்னுடைய சராசர சொத்துக்களெல்லாம், இந் நாட்டின் சட்டத்தின்படி, வேனீஸ் ராஜாங்கத்திற்குச் சேர்ந்து போம்.

கிரேஷியானே — நியாயமறிந்த நீதிபாலா! — கவனி, யூதா! — ஓ வித்தக நீதிவானே !

ஷைலாக் — சட்டம் அப்படியா சொல்லுகின்றது.

போர்ஷியா — சட்டப் புத்தகத்தை நீயே படித்துப் பார். நியாயப்படி நடக்கவேண்டுமென்று நீ வற்புறுத்துவதனல், நியாயமே நடத்தப்படுமென்று அறி; உன்னை விட அதிகமாகவே நாங்கள் நியாயத்தை விரும்பிச் செய்வோம்.

கிரேஷியானே — ஓ சிறந்த நீதிவானே! — கவனி, யூதா! சிறந்த நீதிவானே!

ஷைலாக் — அப்படியானால், இவர்கள் கொடுப்பதாகச் சொல்வதை ஏற்றுக் கொள்கின்றேன். பத்திரத்துத் தொகைக்கு மூன்று மடங்கு கொடுத்துவிட்டு இந்தக் கிறிஸ்தவன் போகட்டும்.

பாசானியோ — பணம் இந்தா.

போர்ஷியா — நிதானப் படு! நியாயமெப்படியோ அப்படியே யூதன் கொள்ளட்டும். நிதானமாயிரு! அவசரப்படாதே; பத்திரத்திற் கண்ட அபராதத்தைத் தவிர அவனுக்கு வேறொன்றும் வேண்டாம்.

கிரேஷியானே — ஏ யூதா! நேரிய நியாயவாதி பார்த்தாயா? கல்வியில் தேர்ந்த நீதிபதி!

போர்ஷியா — இனி நீ தசையை வெட்டி யெடுப்பதற்குச் சித்தப்படு. ஒருதுளி இரத்தமும் சிந்தக்கூடாது; அதிகமாகவும் வெட்டக் கூடாது, குறைவாகவும் வெட்டக் கூடாது; சரியாக ஓர் இராத்தலே வெட்டவேண்டும். ஓர் இராத்தலுக்கு அதிகமாகவாவது குறைவாகவாவது வெட்டுவாயானால், எள்ளளவு அதிகமானாலும் குறைவானாலும், மயிரிழை வித்தியாசப் பட்டாலும், தராசின் ஊசி முனையளவு சாய்ந்தாலும், உன் பிராணனுக்கு வரும், உன்னுடைய சொத்துக்களெல்லாம் ராஜாங்கத்துக்குச் சேரும்.

கிரேஷியானே — தர்மராஜாவின் அபராவதாரமே! — தர்மராஜா, பார்த்தாயா யூதா! இப்போது, மிலேச்சா! உன் குடுமி என்னண்டை அகப்பட்டுக்கொண்டது.

போர்ஷியா — யூதன் என் தாமதப்படுத்துகின்றான்? — யூதா! உன்னுடைய அபராதத்தை எடுத்துக்கொள்.

ஷைலாக் — எனக்குச் சேரவேண்டிய முதற்பணத்தைக் கொடுத்துவிடுங்கள், நான் போகின்றேன்.

பாசானியோ — அது சித்தமா யிருக்கின்றது. இதோ இருக்கின்றது.

போர்ஷியா — பணம் வேண்டாமென்று இந்த நியாய சபையின் முன்னர் அவன் மறுத்திருக்கின்முன். அவன் விரும்பியபடி நியாயமும் பத்திரத்திற் கண்ட நிபந்தனையுமே அவன் பெற்றுக் கொள்ளட்டும்.

கிரேஷியானோ — இவர் தர்மராஜாவே; கலிகாலத்து தர்மராஜா என்று சொல்வேன். தர்மராஜா என்னும் வார்த்தையைக் கற்றுக் கொடுத்தாயே, யூதா! அதற்காக வந்தனம்.

ஷைலாக் — முதற்பணம் மாத்திரம் கொடுத்தாற் போதும், வட்டி வேண்டாம் என்கின்றேனே. அதை எனக்குக் கொடுக்கக் கூடாதா ?

போர்ஷியா — பத்திரத்திற் கண்ட தண்டத்தைத் தவிர வேறொன்றும் உனக்குக் கிடைக்காது. அந்தத் தண்டத்தையும், யூதா! அதிற் சொல்லியபடி சரியாக, அவனுக்குப் பிராணுபாயம் நேரிடாமல் எடுத்துக்கொள்ளக்கூடுமானல், எடுத்துக்கொள்.

ஷைலாக் — அந்தச் சனி எனக்கு வேண்டாம்; அஃது அவனுக்கே நன்மையாகப் போகட்டும்! இனி என்னை ஒன்றும் கேட்க வேண்டாம்.

போர்ஷியா — பொறு, யூதா! சட்டத்தின்படி உன் மீது மற்றொரு பற்றும் உளது. ஒருவன் மற்றொருவனுடைய பிராணனை வாங்குவதற்கு வெளிப்படையாகவாவது கரவடமாகவாவது பிரயத்தனப் பட்டதாக ருஜுவானல்,

அவனுடைய ஆஸ்தியில் பாதி எவனுடைய உயிரைவாங்கு வதற்குச் சதிசெய்தானே அவனுக்கும், மற்றொருபாதி ராஜாங்கத்துப் பொக்கிஷசாலைக்கும் சேரவேண்டிய தென்று வேனிசு நாட்டுச் சாசனங்களில் விதிக்கப்பட் டிரு க்கின்றது; அந்தக் குற்றவாளியின் பிராணன் நகராதிபதி யின் கையிலிருக்கின்றது. அவர் கருணை கூர்ந்து அவனை உயிரோடு விட்டால் விடலாம், இல்லாவிட்டால், அவனு டைய உயிரை வாங்கலாம். இந்த நிலைமையில் இப்போது நீ இருக்கின்றாய்.

ஏனெனில், உன்னுடைய வழக்கினாலும் நடவடிக் கையினாலும் நீ பிரதிவாதியின் பிராணனை எப்படியாவது வாங்குவதற்குப் பிரயத்தனப்பட்டாய் என்று தெளிவாகத் தெரிகின்றது. ஆகையால், இதுவரையில் நான் எடுத்துச் சொல்லிய ஆபத்துக்கு நீ உள்ளாயிருக்கின்றாய். நகராதி பதியாகிய பிரபுவின் காலில் விழுந்து கருணைவேண்டு.

அப்பொழுது ஷைலாக்கை நோக்கிப் பிரபு, "எங்க ளுடைய கிறிஸ்தவ புத்திக்குரிய தயாளத்தையும், யூதக் கொள்கைக்கும் கிறிஸ்தவக் கொள்கைக்கும் உள்ள வித் தியாசத்தையும் நீ தெரிந்துகொள்ளும்பொருட்டு, நீ கேட் குமுன்னரே உன்னுடைய பிராணனை மன்னித்து விடுகின் றேன்; உன்னுடைய சொத்தில் பாதி அந்தோனியோ வுக்கு உரியதாகின்றது; மற்றொரு பாதி ராஜாங்கத்திற் குச் சேருகின்றது" என்றார்.

அப்பொழுது, பெருமனமுடைய அந்தோனியோ அந்த யூதனைப் பார்த்து, "நீ மரித்தபிறகு உன்னுடைய மகளுக்கும் மருமகனுக்கும் சேரவேண்டியதென்று பத்திர மெழுதிக் கொடுப்பாயானால், உன்னுடைய சொத்தில் எனக்குரிய பங்கை உனக்கே விட்டுக் கொடுக்கிறேன்" என்று சொன்னான்.

ஏனென்றால், அந்த யூதனுக்கு மகள் ஒருத்தியே உண்டென்றும், அவள் அவனுடைய விருப்பத்திற்கு விரோதமாகச் சில நாளைக்கு முன் லொரன்சோ என்னும் கிறிஸ்தவனைக் கலியாணஞ்செய்துகொண் டிருக்கிறாளென்றும், அதனால் கோபங்கொண்டு ஷைலாக்கு தன்னுடைய ஆஸ்தியை அவளுக்குச் சேரக்கூடாதென்று அவளைக் குடும்பத்தினின்று நீக்கி எழுதி வைத்துவிட்டானென்றும் அந்தோனியோவுக்குத் தெரியும். அவனுடைய மகளைக் கலியாணஞ் செய்துகொண்ட லொரன்சோ என்பவன் அந்தோனியோவின் நண்பன். அவனுக்கும் அவனுடைய மனைவிக்கும் நன்மை செய்யக் கருதி அந்தோனியோ தனக்குச் சேரவேண்டிய சொத்தை மேற்சொல்லிய நிபந்தனையின்பேரில் விட்டுக் கொடுப்பதாகச் சொன்னான்.

அந்தோனியோ சொல்லியபடி செய்வதாக யூதன் ஒப்புக்கொண்டான். இவ்வாறு, பழிவாங்கும் எண்ணமும் நிறைவேறாமல், தன்னுடைய ஆஸ்திகளும் கொள்ளை போனதனால் யூதன் நியாய சபையைப் பார்த்து, "எனக்கு உடம்பு சரியாக இல்லை. நான் வீட்டிற்குப் போவதற்கு உத்தரவு கொடுங்கள். பத்திரத்தை எழுதி என் வீட்டுக்கு அனுப்பினால் என்னுடைய சொத்துக்களிற் பாதியை என் மகள் பேருக்கு மாற்றிக் கொடுத்துப் பத்திரத்திற் கைச்சாத்திட்டுத் திருப்பி யனுப்புகிறேன்" என்று சொன்னான்.

"போ, துலைந்துபோ, பத்திரத்திற் கையெழுத்துப் போட்டனுப்பு. நீ கொடுமை செய்தது தவறென்று பச்சாத்தாபப்படு. நீ கிறிஸ்தவனாவாயானால், துரைத்தனத்தார் உன்னிடத்திலிருந்து அபராதமாகக் கொண்ட மற்றொரு பகுதி ஆஸ்தியையும் மன்னித்து உனக்குத் தீர்ப்புக் கொடுத்து விடுவார்கள்" என்று நகராதிபதியாகிய பிரபு உரைத்தார்.

இனி, அந்தோனியோவை விடுதலை செய்துவிட்டு, நகராதிபதி கச்சேரியைக் குலைத்தார். நியாயவாதியாக வந்த இளைஞனுடைய புத்தி விசேஷத்தையும் சாமர்த்தியத்தையும் புகழ்ந்து கொண்டாடி, அவனைத் தன்னுடன் சாப்பிட வரும்படி வீட்டுக்கு அழைத்தார்.

தன்னுடைய கணவன் கச்சேரியினின்று மீண்டு பெல்மான்டுக்குப் போய்ச் சேருமுன் அங்கே எப்பொழுதும் உள்ளபடி வீட்டில் இருக்கப் போர்ஷயா கருதி யிருந்தமையின், நகராதிபதியைப் பார்த்து, "தாங்கள் அன்பு கூர்ந்து சாப்பாட்டுக்கு அழைத்ததற்காக மிகுந்த வந்தனம் செய்கின்றேன், ஆனால், நான் உடனே திரும்பிப் போகவேண்டி யிருக்கின்றது" என்றாள். தன் வீட்டில் ஒரு வேளையாவது தங்கியிருந்து அதி புத்திசாலியான நியாயவாதி அசனமருந்தித் தன் உபசாரணைகளைக் கைக்கொண்டு தன்னைக் களிப்பிக்க முடியாததைப்பற்றி நகராதிபதி மிகவும் விசனப்பட்டான். முடிவில், அந்தோனியோவைப் பார்த்து, "இவருக்குத் தக்கபடி சம்மானஞ்செய்; நீ இவருக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கின்றாய் என்று நினைக்கிறேன்" என்று சொன்னான்.

நகராதிபதியும் நியாய சபையினர்களும் கச்சேரியை விட்டு அகன்று சென்றனர். பிறகு, போர்ஷியாவைப் பார்த்துப் பாசானியோ, "கனம் பொருந்திய துரையே உம்முடைய புத்தியின் திறமையினால் எனது நண்பனாகிய அந்தோனியோவும் நானும் துக்ககரமான பெருந்தண்டத்திற்கு ஆளாகாமல் தப்பிப் பிழைத்தோம். அந்த யூதனுக்கு நாங்கள் செலுத்தவேண்டிய மூவாயிரம் தூக்கட்டுகளை நீங்கள் ஏற்றுக்கொண்டு எங்களைக் கௌரவிக்கவேண்டும்" என்றான். அவன் அப்படிச் சொல்லி முடித்தவுடனே, "என்றென்றைக்கும் உங்களுக்கு நாங்கள்

நன்றியுடன் அன்பு செலுத்தவும் ஊழியஞ் செய்யவும் கடமைப்பட்டவர்களா யிருக்கின்றோம்'' என்று அந்தோனியோ சொன்னான்.

அவர்கள் எவ்வளவு சொல்லியும் போர்ஷியா அந்தப் பணத்தை ஏற்றுக்கொள்ள மாட்டேனென்று விட்டாள். ஆயினும், ஏதாவதொரு வெகுமதி பெற்றுக்கொள்ள வேண்டுமென்று பாசானியோ கட்டாயப் படுத்தினதின் மீது, "உனது கையுறைகளைக் கொடு; உனக்காக அவைகளை நான் தரித்துக் கொள்ளுகின்றேன்'' என்று போர்ஷியா சொன்னாள். அந்த வார்த்தையைக் கேட்டுப் பாசானியோ தன் கையுறைகளைக் கழற்றுகையில், அவள் கொடுத்திருந்த மோதிரம் அவனுடைய விரலில் இருப்பதை அவள் கண்டாள்.

பாசானியோவினிடத்திலிருந்து தந்திரமாக அந்த மோதிரத்தை வாங்கிக் கொண்டு அவன் திரும்பி வருமுன் வீட்டுக்குப் போயிருக்கவேண்டுமென்றும், பாசானியோ திரும்பி வந்த பிறகு அந்த மோதிரத்தைப் பற்றி அவனைப் பரிகாசஞ் செய்யவேண்டுமென்றுங் கருத்துக் கொண்டு போர்ஷியா அவனுடைய கையுறைகளைக் கேட்டாள். அவனுடைய விரலில் மோதிர மிருக்கக் கண்டு, "உனக்கு என்னிடத்துள்ள அன்பைப் பற்றி இந்த மோதிரத்தையும் உன்னிடத்திலிருந்து எடுத்துக் கொள்கின்றேன்'' என்றாள்.

பாசானியோ கொடுக்க முடியாத வஸ்து அஃது ஒன்றே, அதனை அந்த நியாயவாதி தனக்கு வேண்டுமென்று கேட்டமையின், அவனுக்குப் பெருந்துக்கமும் சங்கடமும் உண்டாயின. கலக்க மிகுந்து அவன் போர்ஷியாவைப் பார்த்து, "அன்புள்ள துரையே! அந்த மோதிரத்தை நான் கொடுக்கமுடியாததைப் பற்றி மிகவும் விச

னிக்கின்றேன். ஏனெனில், அஃது என் மனைவிகொடுத்த அன்புக்கொடை. அதனை ஒருபொழுதும் எவருக்கும் கொடுப்பதில்லை யெனப் பிரமாணஞ் செய்திருக்கின்றேன். அதற்குப் பதிலாக, வேனீசு நகரத்திற் கிடைக்கக் கூடிய மோதிரங்களுள் மிகவும் விலையுயர்ந்ததை வாங்கிக் கொடுக்கிறேன். முதல்தரமான மோதிரம் எங்கே கிடைக்குமென்று தமுக்குப் போட்டுத் தெரிந்து கொள்கிறேன்'' என்று பாசானியோ சொன்னான்.

அவன் விசனமுற்றுக் கலங்கிச் சொல்லமாட்டாமற் சொல்லிய பதிலைக் கேட்டுப் போர்ஷியா தன்னை அவன் அப்படி அவமானப் படுத்தியதனால் சினங் கொண்டவள் போல நடித்து, "ஐயா! பிச்சைக்காரனுக்குப் பதில் சொல்லுவது போலச் சொல்லுகின்றீரே. நன்று'' என்று சொல்லிக் கச்சேரிக் கட்டடத்தை விட்டுப் புறப்பட்டாள்.

"அன்புள்ள பாசானியோ! அவருக்கு அந்த மோதிரத்தைக் கொடுத்துவிடு. என்னுடைய நேசத்திற்காகவும், அவர் எனக்குச் செய்திருக்கிற பேருபகாரத்திற்காகவும் அவருக்கு நீ அந்த மோதிரத்தை, உன் மனைவிக்கு மன வருத்த முண்டானாலும் உண்டாகட்டுமென்று, கொடுத்து விடுவாயென்று நம்புகிறேன்'' என்று அந்தோனியோ கூறினான்.

அந்தோனியோ அப்படிச் சொல்லிய பிறகும் மோதிரத்தைக் கொடாதிருப்பது நன்றியின்மையைக் குறிக்குமென நினைத்து வெட்கி, அந்தோனியோவின் வார்த்தைக்கு இணங்கிப் பாசானியோ அந்த மோதிரத்தை கிரேஷியானோவின் மூலமாகப் போர்ஷியாவுக்கு அனுப்பினான்.

பிறகு, வக்கீல் குமாஸ்தாவாக வந்திருந்த மேரிசா தன்னுடைய கணவனாகிய கிரேஷியானோவுக்கு ஒரு மோதிரம் கொடுத்திருந்தா ளன்றோ? அவன் கையில் தரித்திருந்த அந்த மோதிரத்தைத் தனக்கு வெகுமதியாகக் கொடுக்கும்படி அவள் கிரேஷியானோவைக் கேட்டாள். தன்னுடைய யஜமானனாகிய பாசானியோவின் தயாளத்திற்கு பின்னடையக் கூடாதென்று நினைத்துக் கிரேஷியானோ அந்த மோதிரத்தை அவளுக்குக் கொடுத்துவிட்டான்.

அந்த ஸ்திரீகளிருவரும் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். தங்களுடைய கணவன்மார் வந்தவுடனே அவர்கள் மோதிரங்களைக் கொடுத்து விட்டு வந்ததற்காக அவர்களைக் கோபித்துக்கொண்டு, வேறு ஸ்திரீகளுக்கு அவர்கள் அந்த மோதிரங்களைக் கொடையளித் திருக்க வேண்டுமென்று நிச்சயமாகச் சொல்லி மனஸ்தாபங் காட்ட நினைத்து அவர்களிருவரும் சிரித்துக்கொண் டிருந்தார்கள்.

வீட்டுக்குத் திரும்பி வந்தபொழுது போர்ஷியா மிகவும் சந்தோஷமாகவும் உல்லாசமாகவும் இருந்தாள். ஏதேனும் ஒரு நற்காரியஞ் செய்து உபகரித்தோமென்று தெரிந்துகொள்கிறவ னெவனுக்கும் அப்படிப்பட்ட திருப்தியும் ஆனந்தமும் உண்டாகுமன்றோ? எதைப் பார்த்தாலும் அவளுக்கு ஆனந்தகரமாகவே இருந்தது.

அதற்கு முன்னால் சந்திரன் அவ்வளவு பிரகாசமாகக் காந்தி வீசியதுபோலத் தோற்றவில்லை. அந்த இனிமையான சந்திரன் மேகத்தினால் மறைக்கப்பட்டபொழுது, பெல்மான்டிலுள்ள அவளுடைய வீட்டினின்று ஒரு விளக்கு வெளிச்சம் தெரிந்தது. அஃது அவளுக்கு மிகவும் மனோகரமாக இருந்தது. அவள் மேரிசாவைப் பார்த்து, "நமக்குத் தெரிகிற அந்த விளக்கு என்னுடைய கூடத்தில்

எரிந்துகொண் டிருக்கின்றது! அந்தச் சிறிய விளக்கின் கிரணங்கள் எவ்வளவுதூரம் பாய்கின்றன! அதுபோலவே, துர்மார்க்கம் நிறைந்த உலகத்தில் ஒரு நற்காரியம் செய்தாலும் அது மிகப்பிரகாசிக்கும்'' என்று போர்ஷியா சொன்னாள். மற்றும், "தன் வீட்டினின்று வரும் சங்கீதத் தொனியைக் கேட்டு, இந்தச் சங்கீதம் பகலில் இருந்ததை விட இனிமையாக இப்பொழுது எனக்குத் தோன்றுகின்றது'' என்று அவள் சொன்னாள்.

போர்ஷியாவும் நேரிசாவும் வீட்டுக்குள் போய்ச் சேர்ந்தார்கள். தங்களுக்குரிய ஆடைகளை அணிந்து கொண்டு, கணவன்மாருடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். சிறிது நேரத்திற்கெல்லாம், கணவன்மார் அந்தோனியோவை அழைத்துக் கொண்டு வந்து சேர்ந்தார்கள். பாசானியோ தன்னுடைய அருமை நண்பனைப் போர்ஷியா சீமாட்டிக்கு பரிச்சயம் செய்வித்தான். அவள் அவனுக்குச் சோபனோபசாரங்கள் கூறி முடிக்குமளவில், நேரிசாவும் அவளுடைய கணவனும் அவ் வறையின் மூலையிற் சச்சரவு செய்துகொண்டிருப்பதை அவர்கள் கண்டார்கள்.

"அதற்குள்ளாகச் சண்டையா? என்ன சமாசாரம்?'' என்று போர்ஷியா வினவினாள். "சீமாட்டி! நேரிசா எனக்குக் கொடுத்திருந்த ஓர் அற்ப மோதிரத்தைப்பற்றிப் பேசிக்கொண் டிருக்கிறோம். அதன்மீது கத்திகளிற் செதுக்கப்பட் டிருப்பது போல, 'அன்புகூர், அகலாதே' என்னும் வாக்கியம் எழுதப்பட்டிருந்தது'' என்று கிரேஷியானோ மறுமொழி கூறினான்.

"மோதிரம் என்ன விலையானாலென்ன? அதன்மீது எழுதிய வாக்கியம் என்ன பொருள் பட்டாலென்ன? அதனை

நான் உனக்குக் கொடுத்தபொழுது, மரணபரியந்தம் அதனைக் காப்பாற்றி வைத்துக் கொள்வதாக நீ பிரமாணஞ் செய்தாயல்லவா? இப்பொழுது, வக்கீலின் குமாஸ்தாவுக்கு அதைக் கொடுத்துவிட்டதாய்ச் சொல்லுகிறாய். நீ அதனை எவளோ ஒரு ஸ்திரீக்குக் கொடுத்திருக்கிறாயென்று நிச்சயமாய்ச் சொல்லுவேன்" என்று மேரிசா வாதாடினாள்.

"என் கை சாக்ஷியாகச் சொல்லுகின்றேன்; அதை ஓர் இளைஞனுக்குக் கொடுத்தேன்; அவன் ஒரு சிறுபையன், அவன் உன்னளவு உயரமே யிருப்பான். சாமர்த்தியமாக வாதித்து அந்தோனியோவின் பிராணனைக் காப்பாற்றிய நியாயவாதியாய்த் தோன்றிய இளைஞனுக்கு அவன் குமாஸ்தாவாக வந்திருந்தான். அந்தப் பிதற்றுவாய்ப் பையன் தனக்குச் சம்பளமாக அதைக் கேட்டான்; அதைக் கொடுக்க மாட்டேனென்று சொல்ல என்னால் முடியவில்லை" என்று கிரேஷியானோ மறுமொழி கூறினான்.

"கிரேஷியானோ! உன் மனைவி உனக்குக் கொடுத்த முதற் கொடையை நீ மற்றொருவருக்குக் கொடுத்து விட்டது உன்மீது குற்றமே. எனது கணவராகிய பாசானியோ பிரபுவுக்கு நான் ஒரு மோதிரம் கொடுத்தேன். அவர் அதை எவருக்கும் ஒருநாளும் எந்தக் காரியத்திற்காகவும் கொடுக்கமாட்டார்" என்று அவனைப் பார்த்துப் பார்த்துப் போர்ஷியா சொன்னாள். உடனே, கிரேஷியானோ தன்னுடைய குற்றத்தை மறைக்கும் பொருட்டு, "பாசானியோ பிரபு தம்முடைய மோதிரத்தை வக்கீலுக்குப் பரிசாக அளித்தார். சிரமப்பட்டு எழுத்து வேலைகள் செய்த அந்த வக்கீல் குமாஸ்தாவாகிய பையன் என்னுடைய மோதிரத்தைக் கொடுக்கும்படி வேண்டினான்" என்றான்.

அந்த வார்த்தையைக் கேட்ட போர்ஷியா மிகக் கோபங் கொண்டவள் போல நடித்து, மோதிரத்தைக் கொடுத்து விட்டதற்காகப் பாசானியோவைத் திட்டினுள். நடந்திருக்கக் கூடிய வர்த்தமானம் என்னவா யிருக்கு மென்பது மேரிசாவின் வார்த்தைகளினுல் ஏற்பட்டதென் றும், அவன் அந்த மோதிரத்தை எவளோ ஒரு ஸ்திரீக் குக் கொடுத்திருக்க வேண்டுமென்றும் போர்ஷியா சொன் ஞள். தன்னுடைய பிரிய சகிக்கு இவ்வாறு கோபமுண் டாக்கினத்தைப்பற்றிப் பாசானியோ மிகுந்த விசனமுற்று, "இல்லை, என்மீது ஆணைப்படி சொல்லுகின்றேன். அதை எவளுக்கும் கொடுக்கவில்லை, சிறந்த வக்கீல் ஒருவனுக்குக் கொடுத்தேன். மூவாயிரம் தூக்கட்டுகள் வாங்கிக்கொள் ளும்படி அவனை வேண்டினேன். பணம் வேண்டா மென்று சொல்லி அவன் மோதிரத்தைக் கேட்டான். அதைக் கொடுக்க முடியாதென்று நான் மறுத்தவுடனே அவன் மனஸ்தாபமாகப் புறப்பட்டுப் போய் விட்டான். இனிமை வாய்ந்த போர்ஷியா! நான் என்ன செய்வேன்? அந்த நிலைமையில் நன்றியில்லாதவன் போல நான் தோற்றுவது எனக்கு மிகவெட்கமாயிருந்தது. ஆதலால், மோதிரத் தைக் கொடுத்து அவரிடத்திற் சேர்ப்பிக்கும்படி அனுப்பி னேன். தேவீ! என்னை மன்னிக்க வேண்டும். அந்த வேளை யில் நீ அங்கே இருந்தால், அருமையான திறமை வாய்ந்த அந்த வக்கீலுக்கு மோதிரத்தைக் கொடுத்துவிடும்படி நீயே எனக்குச் சொல்லியிருப்பாய்" என்று மிகுந்த மனவுருக்கத்தோடு பாசானியோ சொன்னுன்.

"ஆஹா! இந்தச் சண்டைகளுக் கெல்லாம் நானே காரணமாக இருக்கின்றேனே" என்று அந்தோனியோ விசனித்துக் கூறினுன்.

"நீர் அதற்காக விசனப்படாதிரும். இந்த மட்டும் நீர் க்ஷேமமாக வந்து சேர்ந்ததே எங்களுக்குப் பெரிய சந்தோஷமாக இருக்கின்றது" என்று அந்தோனியோவைப் பார்த்துப் போர்ஷியா சமாதானஞ் சொன்னாள்.

அப்பொழுது, "பாசானியோவுக்காக முன் ஒரு சமயத்தில் எனது தேகத்தை யான் பணயம் வைத்தேன். உனது கணவன் மோதிரங் கொடுத்தவனுடைய உதவியின்றேல், யான் இதுவரையில் பிராணனை இழந்திருக்க வேண்டும். இனி ஒருபொழுதும் உன் கணவன் உனக்குச் சொல்லிய வார்த்தையை மீறி நடக்க மாட்டான். அதற்கு நான் உத்தரவாதமாக இருக்கிறேன், அவன் தவறி நடந்தால், என் பிராணனையே ஈடு கொடுக்கிறேன்" என்று அந்தோனியோ தன்னுடைய நண்பனுக்குப் பரிந்து பேசினான்.

"ஆனால், நீர் பாசானியோவுக்கு ஜாமீன் இருக்க ஒப்புக் கொள்ளுகிறீர்; நன்று: இந்த மோதிரத்தை அவருக்குக் கொடுத்து, இதையாவது பத்திரமாகக் காப்பாற்றி வைத்துக் கொள்ளும்படி அவருக்குச் சொல்லும்" என்று போர்ஷியா அவனிடத்தில் மோதிரத்தைக் கொடுத்தாள்.

அந்தோனியோவின் கையினின்று மோதிரத்தை வாங்கிப் பாசானியோ பார்த்தவுடனே, அவன் வக்கீலுக்குக் கொடுத்த மோதிரமே அதுவா யிருக்கக் கண்டு மிகவும் ஆச்சரியப் பட்டான். பிறகு, போர்ஷியா வக்கீலாகவும் மேரிசா வக்கீல் குமாஸ்தாவாகவும் வந்திருந்து அந்தோனியோவை விடுவித்த விவரங்களையெல்லாம் அவள் எடுத்து உரைத்தாள். தன்னுடைய மனைவியின் தைரிய சாகசத்தினாலும் புத்தித் திறமையினாலுமே அந்தோனியோவின்

பிராணன் மீந்ததென்று கண்டு அவன் அடங்காத ஆனந்தமும் மட்டில்லாத சந்தோஷமுங் கொண்டான்.

இனி, போர்ஷியா மறுபடி அந்தோனியோவுக்கு உபசார மொழிகள் உரைத்து, அவனுக்கு வந்திருந்த சில கடிதங்களை அவனிடத்திற் கொடுத்தாள். அந்தக் கடிதங்கள் அந்தோனியோவின் இருப்பிடத்திற்குப் போக வேண்டியிருக்க, ஏதோ தெய்வ கதியாகப் போர்ஷியாவின் கைக்கு வந்தன. அந்தோனியோவின் கப்பல்கள் முழுகிப் போகவில்லையென்றும் அவை க்ஷேமமாகத் துறைமுகத்திற் சேர்ந்திருக்கின்றனவென்றும் அந்தக் கடிதங்களினால் தெரிந்தது.

இந்தப் பெரிய வர்த்தகனுக்கு இதுவரையில் நேர்ந்திருந்த கஷ்டங்களும் ஆபத்துகளும் இப்பொழுது எதிர்பாராமல் உண்டான மகத்தான ஐசுவரியத்தின் சந்தோஷத்தில் மறந்துபோயின. மோதிரங்களின் விஷயமாக உண்டான சச்சரவுகளைப்பற்றியும், கணவர்களுக்குத் தங்களுடைய மனைவிகளையே தெரிந்துகொள்ள முடியாமற் போனதைப் பற்றியும் சாவகாசமாக எல்லாரும் சிரித்து மகிழ்ந்தார்கள்.

